# டாக்டரம்மா

K.A. மதியழகன் B.A.




திராவிடப்பண்ணை

34, சிந்தாமணி :: திருச்சி-2

# முதல் டாக்டரம்மா

"பாவ மூட்டைகள்"

"மாயா சக்திகள்"

"ஆண்டவனின் சந்நிதானத்தையடைய அருகதையற்றவர்கள்"

"ஆணின் போகப் பொருள்—இன்பக் கருவி"

"கொண்டவனுக்காகக் குழந்தை பெறும் இயந்திரம்"

"வெளியுலக விவகாரங்கள் அவர்கள் விழிகளிலே படக்கூடாது. அதன் வேந்தர்கள் ஆண்வர்க்கம்"

"கல்லானாலும் கணவன், புல்லானாலும் புருடன் என்று போற்றவேண்டியது கற்புடைய பூவையரின் பொறுப்பு"

"விவாகம்—அது வீட்டிலுள்ளோர் செய்ய வேண்டிய ஏற்பாடு"

"சொத்து—சுந்தரிகளுக்கு அது எதற்கு? அவர்களே பிறரின் உல்லாசப் பொருள்கள் தாமே!"

"படிப்பு—ஆணின் அகண்ட சாம்ராஜ்யமல்லவா அது. அடுப்பங்கரையில் இருப்பதற்காகவே படைக்கப் பட்டவர்கள் அரிவையர்கள்."

மேலே கூறப்பட்டுள்ள விதிமுறைகளும் வேறுபல வில்லங்கங்களும்தான் தாய்க்குலத்திற்கு "தயாபரர்" களான ஆடவனிடம் அளித்திருக்கும் அன்பளிப்பு! ஏட்டிலே என்பது மாத்திரமல்ல, நாட்டிலும் சரி, வீட்டிலும் சரி; எண்ணங்களிலும் சரி, ஏற்பாடுகளிலும் சரி—அவர்கள் பிறரின் பரிமளமான பதுமைகள்; அவ்வளவுதான். "பெண்குலத்தைப் பெருமைப்படுத் தவேயில்லையா யாரும்?" என்று கேட்கத் தோன்றும். "கண்ணே! கனிரசமே! மானே! மயிலே! அன்னமே! மின்னலே!" என்று இப்படியெல்லாம் இலக்கிய வட்டிலிலே யாருக்குப் படைத்திருக்கிறுர்கள் பாவாணர்கள், பாவையரைத் தவிர?" என்றும் கேட்கத் தோன்றும்.

இதுதான் என்றில்லை. இன்னும் அவர்களின் துடியிடை, தோகைக் கூந்தல், இன்மொழி, இதழோரப் புன்னகை, சுழலும் விழிகள், சுந்தர வடிவம் இவை பற்றித்தான் இலக்கியங்களிலே நூற்றுக்கு எண்பது பகுதி காட்சியளிக்கும். இவை அத்தனையும் கவிஞரின் கவிதா திறமையை, கவர்ச்சி வெறியை — நளினமான நடையலங்காரத்தை அவனிக்கு அம்பலப்படுத்த எழுந்தனவே தவிர காரிகையரின் கறை போக்கவந்த எண்ணக் கருவூலங்களல்ல. எனவேதான் பெண்ணினம் பன்னெடுங் காலமாக "ஆண் ஆதிக்கக்காரர்"களிடம் சிக்கிச் சீரழிந்து சின்னுபின்னப்பட்டிருக்கிறது. மனுவின் போதனை புகுத்தப்பட்ட நமது மண்டலத்திலே என்று மட்டுமில்லை; மாதா கோவிலைப் பின்பற்றிய ஐரோப்பாவிலும் சரி, அமெரிக்காவிலும் சரி இதே அவதிதான் பட்டிருக்கின்றனர் பெண்கள்.

ஆனல், அங்கெல்லாம் சிறைக் கதவுகளை உடைத்துக்கொண்டு சீறிப் பாய்ந்து "ஆணும் பெண்ணும் நிகரெனக் கொள்வதால் அறிவிலோங்கி யிவ்வையந் தழைக்குமாம்" என்ற அறிவுப் பண் பாடிய ஆற்றல்

மகளிர் சில பலர் அவர்களின் அடிமை ஒழிப்புக்காகப் பாடுபட்டுள்ளனர். நல்லறிவாளரின் கருத்துக்கள் அவர்களுக்குத் துணை நின்றிருக்கின்றன. ஏளனத்திற்கும், இழிவிற்கும், கண்டனத்திற்கும், காய்ச்சலுக்கும் சலியாத அவர்களது முயற்சியால் சமுதாயத்தில் இன்று சம உரிமையைப் பெற்றிருக்கின்றனர் அந்த ஆரணங்குகள். மனித சமுதாயத்தின் சுதந்திரம் என்ற ஏட்டிலே பெண்களின் "விடுதலைப் போர்" ருசிகரமான அத்தியாயம், சுவை மிகுந்த பகுதி.

• அப்படிப்பட்ட அறப்போரின் பயனாய்த் தரணியில் பலகோடிப் பெண்கள் தன்மதிப்புடன் வாழ்கின்றனர்; வையத்தை வாழ வைக்கின்றனர். "வீட்டுக்குள் அடைபட்டுக் கிடக்கும் விலங்குகளல்ல, நாங்களும் நாடாளும் நாயகிகள்" என்று பறைசாற்றுவதுபோல் பல பாவையர்கள் இன்று பாராளுமன்ற உறுப்பினர்கள், அந்த நாடுகளிலெல்லாம்! பல மங்கையர்க்கரசிகள் மந்திரிமார்கள்! பிரிட்டன் போன்ற நாடுகளிலே பிரபல வக்கீல்கள்கூட வனிதையர்கள்! "கூண்டுக்கிளி"களாய் இருந்த கோமளவல்லிகள் இன்று வானமண்டலத்திலே சிறகு விரித்துப் பறக்கவில்லை, விமானத்தையே பறக்க வைக்கின்றனர்.

இவ்வளவும் கனவுலகக் காட்சிகளல்ல. பழமையை எதிர்த்துப் போராடிய வீராங்கனைகளின் வெற்றிப் பட்டயம். அப்படிப்பட்டவர்களின் வாழ்விலே, வரலாற்றிலே திராவிடத்தின் பெண்குலம்—ஏன் ஆண்குலமே கூடப் பாடம் பெறவேண்டியவை ஏராளமாக உள்ளன. அவை அத்தனையும் புதுமைப் பெண்ணின் போர்முரசம்; எழுச்சித் தூண்டுகோல்; கலங்கரை விளக்கம்!

* * *

இன்று பொங்கற் புதுநாள்; புதுவாழ்வின் நுழைவுச் சீட்டு; பூரிப்பின் வாயிற்படி. பூரிப்பிற்கு அத்தியா

வசியம் ஆரோக்கியம். அழகு, அன்பு, அமைதி, நோய் நொடியற்ற வாழ்விலேதான் ஆரோக்கியம் தவழமுடியும். அத்தகு நிலைக்கு வியாதியை, வேதனையை விரட்ட வேண்டும். வியாதியை விரட்டும் முறை மருத்துவக் கலை (Medicine) இந்தத் துறையிலே புதுவழி நடந்தாள் ஓர் புதுமைப் பெண். அவளின் ஆசைத் தொண்டை, ஆற்றல் முயற்சியைப் பொங்கற் புதுநாளில் நினைத்து மகிழ்தல் பொறுத்தமுடையது மாத்திரமல்ல, புதுவாழ்விற்கு ஆக்கமும் சேர்க்கும்.

"பெண்பிள்ளையாயிற்றே அம்மா நீ! நாங்கள் எப்படி அனுமதிப்பது ?"

"வைத்தியக் கல்வி ஆண்களுக்கேதான் ஏகபோக வாரிசா ?"

"அப்படியல்ல, அம்மா! ஊரிலே நாட்டிலே இல்லாத பழக்கத்தை நீ ஒருத்தி புகுத்த விரும்புகிறாயே, சரிதானா ?"

"இப்படிச் சொல்லியேதான் நான் கால் கடுக்க ஏறி இறங்கிய வைத்தியக் கல்லூரிகளும் கதவை அடைத்துக்கொண்டன.

"கல்லூரிகளா !"

"ஆம்! சற்று விளக்கமாகச் சொல்லுகிறேன். எனது லட்சியக் கனவு 'லேடி டாக்டர்' ஆக வேண்டுமென்பது. வைத்தியத்திலே எனக்கு அடங்காத ஆசை அந்தத் தொழிலிலே வல்லமை பெறுவேன், மக்கள் துயர் துடைப்பேன் என்ற நம்பிக்கை எனக்கு."

"அதற்காக ?"

"வைத்தியக் கல்லூரியில் மாணவியாக அனுமதி யுங்கள் என்று கெஞ்சிக் கேட்டேன். யார் கேட்டார் கள்? நான் பெண் பிள்ளையாம்! ஆகவே சேரமுடியா தாம்! சட்டம் இல்லையாம்! சம்பிரதாயத்திற்கு விரோத மாம்!"

"அம்மணி! அவ்வளவு ஆவலா உனக்கு வைத் தியத்தியத்தில்?"

"வேண்டுமானால் கேள்வி கேளுங்கள். முடிந்த அளவு விடை சொல்கிறேன்."

இந்த உரையாடல் சரியாக நூறு ஆண்டுகளுக்கு முன் அதாவது 1849-ம் ஆண்டில் நியூயார்க் நகரிலுள்ள ஜினிவா கல்லூரியில் நிகழ்ந்தது. உரையாடலிலே கலந்து கொண்ட பாத்திரங்கள் கல்லூரித் தலைவரும், இடந் தேடிவந்த குமரி ஒருத்தியும், குமரியின் பெயர் எலிஜ பெத் ப்ளாக்வெல் (Elizabeth Blackwell) என்பது. வைத்தியக் கல்வி பயிலவேண்டும் என்ற தணியாத ஆசையால் கல்லூரி வாயிற்படியெல்லாம் ஏறி ஏறி இறங்கினாள். கடைசியாகத்தான் 12-வது இடமாக ஜினிவாக் கல்லூரித் தலைவரைக் கண்டாள். பழைய பல்லவிதான் திருப்பிப் படிக்கப்படும் என ப்ளாக்வெல் கருதினாள். ஆனால், "யோசிக்கிறேன்" என்ற கல்லூரித் தலைவரின் பதில் அவளது வரண்ட பாலை உள்ளத்திற்குப் பால் வார்ப்பது போலிருந்தது.

வைத்தியக்கலை பற்றிய அவளது வேட்கை, விவேக விளக்கம் ஆகியவை தலைவருக்கு இவளுக்கு உதவவேண் டும் என்ற எண்ணத்தைத் தந்தன. ஆனாலும் புதுவழி யல்லவா? பலர் நடந்தறியாத பாதையாயிற்றே! பாவையல்லவா அவள்! பழமை சீறுமோ! பயங்கர விளைவாகுமோ! பள்ளிக்கு மாசு வந்தடையுமோ என்ற பலத்த மனப்போர் அவருக்கு. ஆசைக்கும் அச்சத்திற்

கும் இடையே அவர் முடிவுகாண முடியாது தத்தளித்தார். கடைசியாக மாணவர்களையே "உங்களோடு மாதொருத்தி மருத்துவம் பயில விரும்புகிருள், சம்மதம் தாஞ?" என்று கேட்டுவிடுவது என்று முடிவு செய்தார். இந்தப் பிரச்சினையின் கீழ் தேர்தலும் நடத்திஞர். (ஜனநாயக நாடல்லவா அது!) குமரி ஒருத்தி கூடப் பயில விரும்புகிருள் என்ருல் எந்தக் குமரன்தான், குறு நகை புரியாமல், குதூகலிக்காமல் கோபிப்பான்! எல்லா மாணவர்களும் "ஏற்றுக் கொள்ளுங்கள்" என்று ஏக மனதாக வாக்களித்தனர். ப்ளாக்வெல்லின் படிப்புப் பயணம் தொடங்கியது.

பட்டமளிப்பு விழாவன்று மண்டபத்தில் எள்விழ இடமில்லை. கிழவிகளும் மகளிரும்கூடக் கூடியிருந்தனர். "முதல் லேடி டாக்டர்" பட்டம் பெறுவதைக் காண. அவள் பட்டம் வாங்கும்போது மண்டபத்தின் தூண்கள் கூட அதிர்ந்தன, கரகோஷ ஆரவாரமிகுதியால். ஆஞல் ப்ளாக்வெல் முழுத் திருப்தியடைய முடியவில்லை. பயிற்சி வகுப்பை முடிக்க பிலடல்பியாவிலும் நியூயார்க்கிலும் ஆஸ்பத்திரியில் சேர முயற்சித்தாள். முடிவு தோல்விதான். அங்கும் தொல்லை தொடர்ந்தது. பெண்மணியை எப்படி அனுமதிப்பது என்றனர் அந்தப் பித்தர்களும்.

"துர்பாக்கிய நாடே! உன்னைத் துறக்கிறேன். ப்ளாக்வெல்லின் பெருமையை ஒருநாள் உணரப் போகிருய். போய்வருகிறேன்" என்று கப்பல் தளத்திலே கண்ணீரைச் சிந்திவிட்டுப் பாரிஸ் நகரம் சேர்ந்தாள்.

பாரிஸ்—பஞ்சையும் பராரியும் பாராள்வோனுக்கு எதிராகப் போர் புரிந்த இடம்—பயங்கர பாஸ்ட்டிலி படுசூரணமான இடம்-சுதந்திரம், சமத்துவம், தோழமை ஆகிய மலர் குலுங்கும் பூங்கா என்ற எண்ணம் அவள் இதயத்திலே துள்ளிக் குதித்தது. ஆஞல், உண்மை

நிலைமை இங்கென்ன வாழ்கிறதா என்று கேட்கவேண்டியதாய் இருந்தது. "பட்டம் பெற்றுலென்ன, பாவை தானே, முடியாது முடியாது" என்று பாரிசும் பதிலளித்தது. இறுதியாக ஓர் பொது மருத்துவ விடுதியில் மருத்துவச்சியாகச் சேர்ந்தாள். அந்த நேரத்தில் புகழ் பெற்ற ப்ளாரன்ஸ் நைட்டிங்கேலின் தோழமை கிடைத்தது.

தாயகம் திரும்பினுள் வெற்றிக்கொடியோடு நியூயார்க் நகரத்திலே ஒரு சிறு மருத்தவ விடுதி! அதிலே துவங்கியது அவள் "லேடி டாக்டர்" வாழ்வு. வாழ்க்கை என்னவோ போராட்டமாய்த்தானிருந்தது. நூறடுக்கு மாடிகளின் ஏணிப்படியிலே ஏறியிறங்க வேண்டியிருந்தது. படுக்கையில் பரிதவித்துக்கொண்டிருந்த நோயாளிகளுக்கு மருந்து கொடுக்க. பகல் வேளைகளில் மகளிரும் மதலைகளும் மொய்த்தனர் மருத்துவத்திற்காக. ஆதரவற்ற அநாதைப் பெண்கள், குழந்தைகளைக் கண்டு அவள் உள்ளம் துடித்தது ஓர் யோசனை மலர்ந்தது. அந்த அநாதைகளுக்கு ஆஸ்பத்திரி கட்டப் பொருள் உதவி தேவை என வேண்டுகோள் விடுத்தாள். விழலுக்கிறைத்த நீராகிவிடவில்லை வேண்டுகோள், ஏதோ பணம் சேர்ந்தது. ஆஸ்பத்திரி உருவாகியது. அவளின் இளையவள் எமிலி என்பாளும் உடனிருந்து ஒத்துழைத்தாள். மருத்துவ விடுதி மடமடவென வளர்ந்தது.

அந்தத் தருணத்தில் அமெரிக்க அரசியல் வானில் உள்நாட்டுப் போர்மேகங்கள் குவிய ஆரம்பித்தன. புத்திக் கூர்மையுள்ள ப்ளாக்வெல் நைட்டிங்கேலின் அநுபவத்தை மாதிரியாகக்கொண்டு "நர்சுகள்" தயாரித்தாள். போர்க் களத்திலே காயம்பட்ட வீரர்களுக்கு, கை, கால் ஒடிந்தவர்களுக்கு, குண்டு பாய்ந்தவர்களுக்கு, வியாதி பிடித்தவர்களுக்குப் பணியாற்ற அத்தகைய படை தேவை என உணர்ந்தாள். அவளது அருமையான யோசனையை அரசாங்கமும், வரவேற்றது.

போரிலே இறந்துவிட்ட டாக்டர்களின் இடத்தைப் பூர்த்தி செய்ய 1865ஆம் ஆண்டு தனியாக மகளிர் மருத்துவக் கல்லூரி ஒன்றை நிறுவினாள். இந்தக் கல்லூரி மற்றைய எல்லாக் கல்லூரிகளிலும் மங்கையரை அனுமதிக்கின்றனர் என்ற நிலைவந்த 35 ஆண்டுகளுக்குப் பிறகு மூடப்பட்டது.

1869ஆம் ஆண்டு அவள் இங்கிலாந்து திரும்பிய நேரத்தில் 500 லேடி டாக்டர்கள் அமெரிக்காவில் உண்டாயிருந்தனர். 1875ஆம் ஆண்டு இங்கிலாந்தில் மகளிர் மருத்துவக் கல்லூரியை நிறுவினாள்.

சென்ற இரண்டு திங்களுக்குமுன் நியூயார்க் மருத்துவ விடுதி (New York Infirmary) யைச் சேர்ந்த வெள்ளுடை தரித்த பெண் சர்ஜன்களும் அமெரிக்கா முழுவதுமுள்ள பல ஆயிரம் லேடி டாக்டர்களும் இந்த விசித்திர வனிதை "லேடி டாக்டர்" பட்டம் பெற்ற நூற்றாண்டு விழாவை வெகு விமரிசையாகக் கொண்டாடினர்.

இன்று அமெரிக்க நாட்டில் பெண்களை அனுமதிக்காத மருத்துவக் கல்லூரியே இல்லை என்னலாம். 10.000 பேர் லேடி டாக்டர்களாய் உள்ளனர். ஏறக்குறைய 4 லட்சம் பேர் நர்சுத் தொழிலில் ஈடுபட்டுள்ளனர். முப்பது கோடி மக்களைக் கொண்ட பரந்த இந்திய உபகண்டத்திலே 2.000 லேடி டாக்டர்கள்தான் உள்ளனர். 7.000 நர்சுகள் உள்ளனர். சரிதானா ?

# வெந்தணலில்

எத்தனையோ தூரம் நடந்து வந்துவிட்டான். ஊர்க்கோடியிலேயுள்ள ஆலமரத்தின் உச்சியும் அவன் கண்களில் தென்பட ஆரம்பித்தது. இரவெல்லாம் நடந்திருக்கிருன். இருள் அவனுக்குத் தெரியவில்லை. குளிரும் அவனைப் பாதித்ததாகக் காணேம். கிழக்கு வானில் உதய சூரியன் எழுந்து இரண்டு பனை உயரம் போய்விட்டான். வானத்திரையில் எத்தனையோ வர்ண ஜாலங்களைத் தீட்டிக் காட்டினன். அவற்றையெல்லாம் கவனிக்க அவனுக்கு நேரமேது; நினைப்பேது! அவனுக்கிருந்த ஒரே கவலையெல்லாம் ஊர் சேரவேண்டும். வேறு நாளாயிருந்தால் இயற்கையின் எழில் நடனத்தில் லயித்திருப்பான். இன்றைக்கு அவனது நிலை அதுவல்ல. காரணம் எவளை அவன் வாழ்வில் வசந்தத்தை வீசச்செய்ய கைப்பிடித்தானே, அவளை மணமான அன்றே பிரிந்த துர்ப்பாக்கியவான் அவன். நாட்டின் கட்டளை போருக் கழைத்தது. மணக்கோலத்தைக் களைந்து போர்க்கோலம் பூண்டான். போகக் களத்தில் புதுமணப் பெண்ணுடன் புரளவேண்டியவன் போர்க்களத்திலே போரிட்டான். ஆண்டுகள் மூன்று உருண்டோடிவிட்டன. அந்த அபாக்கியவதியின் நினைவுச் சித்திரம் அவன் நெஞ்சை விட்டு அகலவில்லை. போர்க்களத்திலே எதிரிகள் வீசிய அம்புகளை அவன் சமாளித்திருக்கிருன், பெருமிதத்துடன். ஆனல், அந்தப் புன்னகைக்காரி வேல்விழியால் அவனது விலாப்புறத்தைக் கொத்தவரும்போது, அதனைத் தடுக்க கவசமேது, ஆற்றலேது? போரிலே அவனுக்கு வெற்றிதான். முழு மகிழ்ச்சி அவனது உள்ளத்

தில். ஆனாலும் அவனுக்கு ஏதோ குறை. அவளது மடியிலே அவனது தலையைப் புதைத்துக்கொண்டு நிசப்தமான இரவு முழுதும் அவனது வீரதீர பராக்கிரமங்களை இனிக்க, இனிக்க அவளுடன் பேசவேண்டும் என்பது அவனது ஆசை. இன்னும் எத்தனை ஆசைகளோ!!

ஆலமரமும் வந்துவிட்டது அதைத் தாண்டி ஊருக்குள்ளே இரண்டு தெரு நடந்தால் அவனது இல்லம். யார் கண்ணிலும் படாமல் திடீரென்று வீட்டிற்குள் நுழைந்து அவனது ஆசைக்கினியவளையும், அன்னையையும் ஆச்சரியத்திலும் ஆனந்தத்திலும் மூழ்கடிக்கவேண்டும் என்பது அவனது பேராசை. பத்தடி நகர்ந்திருப்பான். அவன் கண்ட காட்சி அவனாலேயே நம்பமுடியவில்லை. ஊர்ச்சாவடி—அங்கு பெரும் ஜனத்திரள். பஞ்சாயத்து கூடியிருக்கிறது. ஊர்ப் பெரிய தனக்காரன் நீதிபதிகள் வரிசையிலே தலைமைவகிக்கிருன். இன்னும் கொஞ்சம் அருகே நெருங்கினுன். எல்லாக் கண்களும் இவனை நோக்குகின்றன. அந்தக் கண்களிலே மகிழ்வு ஒளியையல்ல, பரிதாபத்தைக் காண்கிருன். நிலைமை மேலும் குழப்பமாகிறது. குற்றவாளிக் கூண்டு தெரிகிறது அங்கே நிற்பது வேறு யாருமல்ல அவனது இதயக் கூண்டிலே சிறை வைக்கப்பட்டிருக்கும் கோமளவல்லியேதான். அவள் முகத்திலே சோகம் கப்பியிருக்கிறது. கண்களில் ஒளி சுடர் விடவில்லை. தேங்கிய குளமாகக் காட்சி அளிக்கிறது.

கணவனுடன் உடலுறவு கொள்ளதவள்—அவள் ஐந்துமாத கர்ப்பிணி. விபசாரக் குற்றம் சாட்டப்பட்டு வெட்ட வெளியில் நிறுத்தப்பட்டிருக்கிருள். அவளோ வேதனைப்படுவதாகவும் காணும்; வெட்கப்படுவதாகவும் காணும். அச்சம் அவள் முகத்திலே இல்லை. அமைதி தாண்டவமாடுகிறது. அந்த மண்டலத்தில் விபசாரக் குற்றத்திற்கு தண்டனை மரணம். "பலாத்காரமாகக் கற்பழிக்கப்பட்டேன்" என்று கூறி எந்தக்

கயவனையாவது காட்டினால் அவள் மன்னிப்புப்பெற மார்க்கமுண்டு; உயிர் தப்ப வழியுமுண்டு. அவளோ ஊமையாக நிற்கிறாள். ஏதாவது கேட்டால் சில சொற்கள்தான் உதிர்க்கிறாள்.

"நான் கர்ப்பவதி. அதற்குமேல் ஒன்றும் சொல்லத் தயாராக இல்லை. எனது நிலைக்குக் காரணம்; எவராலும் அடக்கமுடியாத உணர்ச்சிப் போராட்டத்தின் விளைவாய் ஒரே நாள் நான் நடந்துகொண்ட செயல். வைராக்கியத்தின் வேந்தனும் விசுவாமித்திரனேயானாலும் அந்த நிலையில் தப்பியிருக்கமாட்டான்; தவறியே இருப்பான்"—இவை தவிர வேறோர் வார்த்தை சொல்ல மறுக்கிறாள்.

நீதிபதிகளோ ஓர் உத்தமர்; அறிஞர். சமுதாயத்தின் கோளாறுகளைக் குணப்படுத்தும் மருந்து தேடிக்கிடந்த வித்தகர். அவர் சொல்லுகிறார், "அந்தப் பெண்ணின் செயலுக்குக் காரணம் சந்தர்ப்பமும் சூழ்நிலையும் செய்த சதி. அவளை மன்னித்துவிடலாம்" என்று. அவரின் வார்த்தைகள் பெரியதனக்காரன் மூளையிலேயும் மற்றவர்கள் அறிவிலும் ஏறுவதாகக் காணோம். அவளுக்கு மரண தண்டனை விதிக்கப்படுகிறது. மறுநாள் அது நிறைவேற்றப்படவேண்டும்.

மறுநாள் காலை. மரண தண்டனையை நிறைவேற்றுவதற்கு மன்றம் கூடியிருக்கிறது. ஊர் மக்களுக்கு உத்தமரின் வார்த்தைகளிலே அனுதாபம் இருந்தது. அவர்கள் என்ன நீதிபதியா? பிரதம மந்திரியா? அந்த மண்டலத்து வழக்கம் மரணதண்டனையை மணாளனே நிறைவேற்ற வேண்டும். கூர்மையான வாளொன்று அவள் கொழுநனிடம் கொடுக்கப்படும். குற்றவாளியென நிரூபிக்கப்பட்டவளை பீடத்திலே நிறுத்தி, அவளது தலையையும் உடலையும் இரண்டு துண்டாக அவன் வெட்டவேண்டும். இந்தப் போர்வீரனே திகைப்படைந்தான். நீதிமன்றம் உத்தரவிடுகிறது, அந்த உதவாக்கரையை இரண்டு துண்டாக்கு என்று. அவனது

உள்ளம் கேட்கிறது: 'நீ எத்தனை எத்தனை துடியிடையாள், தோகைமயிலாள், தேன்மொழியாள், தேககாந்தியாளிடம் சொக்கிக் கிடந்தாய்; அரவணைப்பிலே மகிழ்ந்தாய்; அட்டகாசம் புரிந்தாய், நீ போர் வீரனுகத் திரிந்தபோது' என்று.

"இவளை ஏன் கொல்லவேண்டும்? இவளுடன் வாழவில்லை. விலக்கிவிடுகிறேன்" இப்படிச் சொல்கிருன் நீதிமன்றத்தின் கட்டளையை நிறைவேற்ற வேண்டியது இவன் கடமையே தவிர இவன் விருப்பத்தை நிறைவேற்றவா நீதிமன்றம் இருக்கிறது? பச்சாதாபமிக்க தாய்க்குலத்தினர் சிலர், "அந்தத் தவறியவளை வேண்டுமாஞல் தண்டியுங்கள். அவள் வயிற்றிலே வளரும் வாயில்லாப் பூச்சியை, கர்ப்பத்திலே இருக்கும் மதலையைக் கொல்ல உங்களுக்கேது உரிமை?" என்று கேட்கின்றனர். யார் கேட்டாலென்ன. அந்தக் காரிகை பலிபீடத்தின் முன்னுல் நிறுத்தப்பட்டாள். கணவன் என்ன காரியம் செய்யப்போகிருேம் என மருண்டான். போதை மருந்து அவனுக்குக் கொடுக்கப்பட்டது. அவன் கையிலே கொடுவாள் கொடுக்கப்பட்டது. இன்னும் ஓரிரு விஞடிகளில் அவள் தலையும் முண்டமும் இரத்தத் தடாகத்தில் மிதக்கும். அப்போதும் அவள் மன்னித்து இரக்கம் காட்டுங்கள் எனக் கெஞ்சவில்லை. எதற்கும் துணிந்தவளாய்க் காணப்படுகிருள். அவள் தலையைச் சாய்த்துவிட்டாள். கணவனும் கத்தியை ஓங்கிவிட்டான். மயிர்க்கூச்செரியும் சந்தர்ப்பம்! ஒரே மௌனம். அந்த மௌனத்தைக் கிழித்துக்கொண்டு ஒரு பொக்கைவாய்க் கிழவி, வெறிபிடித்தவள்போல் பேச ஆரம்பித்தாள். கணவனின் கத்தி, கட்டிய மனைவியின் கழுத்தைப் பதம் பார்க்கவில்லை. அவனது கரத்திலே இருக்கிறது. கிழவி பேசுகிருள்:

"எழுபது ஆண்டுகளுக்கு முன்பு நடந்தது. அப்போது எனக்கு வயது பதினேழு. ஒரு நாள் நல்ல பூர்ண வெண்ணிலவு. நானும் எனது தோழிமார்களும்

நமது ஊர்க் கோவிலிலே நிலாச்சோறு ஒன்று நடத்தினோம். என்னை யொத்த குமரிகள் நெடுநேரம் கூடி விளையாடினோம். குறும்புகள் பேசினோம். கும்மியடித்தோம். பாட்டுகள் பாடி இன்ப நாதத்திலே மிதந்தோம். இனிய தென்றல் எங்களைத் தழுவியது. பேசிக்கொண்டே படிக்கட்டுகளிலே உறங்கிவிட்டோம். எனது தோழிமார்கள் ஒவ்வொருவராக வீட்டுக்குச் சென்றுவிட்டனர், என்னை ஆழ்ந்த உறக்கத்தில் விட்டுவிட்டு. திடீரென விழித்தேன். விழித்த நிலையில் இரண்டு காமுகர்களின் முரட்டுப் பிடியிலே சிக்கிக் கசக்கப்படுவதைக் கண்டேன். என்னை விடுவித்துக்கொள்வதற்கு முயலுவதற்கு முன்பு எனது கன்னி அழிந்துவிட்டது" என்றாள். உடனே நீதிபதிகள் அமர்ந்திருந்த இடத்தைப் பார்த்து வெறிபிடித்தவள் போல், "உங்கள் நீதிமன்றத்திற்குத் தலைமை வகிக்கிறானே பெரியதனக்காரன், இவன்தான் அந்த இரண்டு காமுகர்களில் ஒருவன்" என்று மேலும் உரக்கக் கத்தினாள். கூட்டத்தில் ஒரே பரபரப்பு ஏற்பட்டது! ஊர்ப் பெரியதனக்காரன் அப்போது அங்கு இல்லை. கிழவி கதையைத் தொடங்கியவுடனேயே மெள்ள நழுவிவிட்டான். யாரும் அதைக் கவனிக்கவில்லை. கிழவி மேலும் தொடர்ந்தாள் :

"மற்றோர் காமுகன் யாரென்று தெரிய விரும்புகிறீர்களல்லவா ? அவர் எனது கணவர். ஆச்சரியமாக இருக்கிறதா? எனது கன்னி அளிக்கப்பட்டதும் எனது அன்னையிடம் சென்று விம்மி விம்மி அழுதேன். விவரத்தைச் சொன்னேன். அம்மா, அப்பாவிடம் அழுகுரலில் கூறினாள். அப்பா பெரிய போக்கிரி. ஊரிலே யாருக்கும் அவரைக் கண்டால் பயம். ஆனால் நியாயமானவர். இரண்டு துடுக்குச் சிறுவர்களையும் பிடித்து மிரட்டினார். ஒருவனை என்னை மணக்கச் செய்தார். மற்றவனை ஊரைவிட்டு விரட்டினார். இந்த ஊர்ப் பெரியதனக்காரன் அவர் உயிரோடிருக்கும்வரை ஊருக்குள்ளே காலடி எடுத்து வைக்கவில்லை."

கிழவியின் கதை மக்கள் மன்றத்திலே பெரிய மன மாறுதலை ஏற்படுத்தியது. நீதிபதிகளே மன மாறுதல் அடைந்தனர். முதலிலே சொன்ன உத்தமர் கூறிய நியாயத்தை ஆதரித்தனர். உத்தமர் கூறியபடி, "சந்தர்ப் பமும் சூழ்நிலையும் செய்த சதி" எனத் தீர்ப்பு வழங்கப் பட்டது.

போர்வீரனின் மனைவிக்கு விடுதலை மட்டுமல்ல, முன்னுள் உரிமைகளுடன் போர்வீரனுடன் புது வாழ்வு வாழ அனுமதியும் கொடுக்கப்பட்டது.

"தைரியவல்லியம்மா நீ! உணர்ச்சிக்கு அடிமைப் பட்ட உனது நிலையை ஒளிவு மறைவில்லாமல் உரைத் தாயே! உண்மையை மரணத்தின் தலைவாயிலிலும் மறைக்காமல் உலகத்துக்கு உரைத்தாயே. உத்தமி! உனது உதார குணத்திற்கு எனது வாழ்த்துக்கள். நீ எனது மகளாகப் பிறந்திருந்தால் என் உள்ளம் கர்வத் தால் கள்வெறி கொண்டிருக்குமம்மா" என்று உத்தமர் தீர்ப்பிலே குறிப்பிட்டார்.

போர்வீரன் பக்கம் திருப்பினுர். "வீரனே, தீர்ப்பு வழங்கியாகிவிட்டது. அதனை நிறைவேற்றுவது உனது கடமை. உனது உத்தேசம் என்ன?"

போர்வீரன்! "உத்தமரே, நான் ஓர் போர்வீரன். கட்டளைக்குக் கீழ்ப்படிந்து கடமையை நிறைவேற்று வது போர்வீரன் இலக்கணம். தவிக்கவிடமாட்டேன் இந்தத் தளிர்மேனியாளை. அவளது பிள்ளைக் கனியமு தையும் எனது மதலையென பாவிப்பேன்" என்று கூறி மரணத்திலிருந்து தப்பிய மங்கையைத் தழுவி நின்றுன்.

எங்கே என்கிறீர்களா—இங்கே தான். எப்போது என் கிறீர்களா —வேதகாலத்தில். வேதகாலத்தில் இவ்வளவு வேகத்துடன் தீர்ப்புக்கூற எந்த விவேகி இருந்தான். எப்படி முடிந்தது என்கிறீர்களா? பிறகேன் இன்றைய

விபரீதம் என்கிறீர்களா? எல்லாம் உண்மைதான். விவேகி இருந்ததும் உண்மை; விபரீதம் இருப்பதும் உண்மை. எந்த ஊரில் என்கிறீர்களா—சொல்லமுடியாது. தெரியாததால் அல்ல; உண்மை அழிக்கப் பட்டதால். காரணம் வெந்தணல்!

இந்திய உபகண்டத்தில் புரோகிதர்களின் கொட்டம் உச்ச நிலையிலேயிருந்த நேரம். நால் வருணம் சதிராடியது.

ஆலயங்களில் மணியோசை கேட்டது. யாக குண்டங்களிலே புகை எழுந்தது. பாவ புண்ணியம் பேசப்பட்டது. அந்த லோக வாழ்விற்கு அங்குள்ள புரோகிதற்கு தட்சணை தாம்பூலம், கட்டளை, காணிக்கை வழங்கப்பட்டது. நடனமாதுகள் கோவிலிலே நடனமாடினர். சோம்பேறிகள் கோவில் பெருச்சாளிகளாயினர்.

மக்களோ, தங்கள் ஆடு மாடுகளைத் தின்ன வரும் வனவிலங்குகளிடம் ஆற்றலுடன் போரிடுவர். கள்ளர்கள் கொள்ளைக் கூட்டத்திடம் காப்பாற்றிக் கொள்வர். ஆனால், அவர்கள் ஆற்றல், அறிவு, தைரியம் மதத்தாகரின் முன்பு—இடிக்கும், மின்னலுக்கும், புயலுக்கும், பெருவெள்ளத்திற்கும், பேய்க்கும், பிசாசுக்கும் மதத்தைக் காரணங்காட்டி மருட்டிய மதோன்மத்தரிடம் மண்டியிட்டது. பெண் மாயப் பிசாசம், பெண் பிறப்பு பாவம், ஆணுக்கு அடிமை பெண்—என்ற கவைக்குதவாதக் கருத்துக்கள் சமுதாயத்திலே செல்வாக்கு பெற்றது. சீறிவரும் புலியதனை முறத்தினாலே அடித்துத் துரத்தும் ஆற்றலிருக்கும் பெண்களுக்கு, தங்கள் கற்பைச் சூறையாடவரும் கபடவேஷதாரிகள், கடவுள் பெயரைச் சொல்லித் திரியும் கயவரிடம் தப்பும் வழியறியார். சினங்கொண்ட சிங்கத்திடம் சண்டையிடுவர், நரிக்குணங் கொண்ட புரோகிதரிடம் மண்டியிடுவர்.

மதத்தின் கொடுமையும் மகளிர் அடிமையும் கண்ட ஓர் புதுமணத் தம்பதிகளுக்கு இந்தச் சமுதாயத்தின் மீது கோபக்கனல் மூண்டது. தாங்களே உண்மையை உணர வேண்டுமென்று பெரும் யாத்திரை கிளம்பினர்.

வனமிருகங்கள் நிறைந்த ஆரணியத்தின் நடுவே சென்று கொண்டிருந்தனர். வேடுவர் சிலர் சிங்கங்கள் இரண்டை வேட்டையாடிக் கொண்டிருந்தனர். உயர்ந்த மரத்தில் இருவரும் ஏறினர்.

வில்லிலே நாணேற்றி அம்பைத் தொடுக்கக் காத்திருந்தனர். அநுபவம் நிறைந்த வேடுவர் சிலர், "பெண்சிங்கத்தை முதலிலே கொல்லுங்கள்; பெண் சிங்கத்தை முதலிலே கொல்லுங்கள்" என்று கத்தினர். எல்லா அம்புகளும் பெண் சிங்கத்தின்மீது ஒரே நேரத்தில் பாய்ந்தன. அடுத்த சில விநாடிகளில் ஆண் சிங்கமும் வேட்டையாடப்பட்டது. கீழேயிறங்கிய தம்பதிகளுக்கு பலத்த சந்தேகம் ஏற்பட்டது. "வேடுவரே, முதலில் பெண் சிங்கத்தைக் கொல்வதற்குக் காரணமென்ன?" என்று வினவினர். "முதலில் ஆண் சிங்கத்தைக் கொன்றிருந்தால் பெண் சிங்கம் சும்மா இருக்காது. எங்களில் சிலர் உயிரையாவது மாய்த்திருக்கும்" என பதிலிருத்தனர். வேடுவர் செயலுக்கும் வேதியக் கூட்டத்தின் செயலுக்கும் வித்தியாசமில்லை என உணர்ந்தனர். வேடுவரைப் போலவே மதவாதிகளும் பெண்ணை பைசாசமாக்கி, கோழையாக்கி, பாவமாக்கி அடிமைப் படுத்தியதால், ஆணையும் வெறும் சூதாட்டக்காயாக, பொம்மையாக பயன்படுத்த முடிந்தது என்ற முடிவுக்கு வந்தனர்.

அந்த முடிவுக்கு மற்றொரு சம்பவமும் ஆதாரமாய் அமைந்தது. தவம் செய்துகொண்டிருந்த முனிபுங்கவர் ஒருவரின் பர்ணசாலைக்குச் சென்றனர். தங்களுக்குள்ள அறிவுத் தாகத்தையும் தங்கள் யாத்திரையின் நோக்கத்

தையும் விளக்கினர். முனிபுங்கவர் மோன நிலையிலிருந்து கண் திறந்து ஆண் மகனைப் பார்த்து, "உனக்கு ஞானோப தேசம் செய்கிறேன். ஆண்டவன் சந்நிதானத்தில் பெண் இருக்கக்கூடாது, பெண் பைசாசம்; அவளைப் போகச் சொல்" என்றார். ஆண் மகன் "ஆணும் பெண்ணும் சரிநிகர் சமானந்தானே; பெண்ணை இழிவுபடுத்துவது சரியல்ல" என்றான். முனிபுங்கவருக்கு கோபம் பீறிட்டது. "சாணிக் குழியைத் தோண்டுவதால் மாணிக்கமா கிடைக்கும்?" என்றார்.

அவனுக்கு ஆத்திரம் பீறிட்டது. "பெரியவரே உளறுதீர்" என்றான். முனிவர் தமது தபோ வலிமை யினால் அவன் மனைவியை பஸ்பம் செய்வதாக பயமுறுத் தினார். மனைவியோ மருளவில்லை, "நடக்கட்டும் முனி வரே" என்று எதிரே நின்றாள். முனிபுங்கவரின் கண்கள் கொவ்வைப் பழமாயின. தீப்பொறி பறக்க கண்களை உருட்டினார். தமது தோல்வியை நினைத்து வெட்கித் தலைகுனிந்தார். அவரது சீடர்களோ விதண்டாவாத தம்பதிகளை நையப் புடைக்க ஆரம்பித்தனர். வேடிக்கை பார்த்த வழிப்போக்கர்கள் அவர்களைக் காப்பாற்றினர்.

அந்தத் தம்பதிகளின் பெயர் சாருவாகன்—சாரணி யாகும். நாலாயிரம் வருடங்களுக்கு முன்பு சண்டமாருத மென வளர்ந்த சனாதனத்திற்கு எதிராக "நாலு வேத மேது? நாலு ஜாதி எப்படி நாதன் கட்டளையாகும்? எங்கே சொர்க்கம்? எங்கே நரகம்?" என்று சமர் புரிந்த வர் சாருவாகர். இவர்தான் ஆரம்பத்திலே தீட்டியுள்ள சம்பவத்தில் தீர்ப்பு வழங்கிய உத்தமர்.

இந்த உத்தமரின் பார்ப்பனீய எதிர்ப்புக் கருத்துக் கள் மக்கள் மன்றத்திலே குடியேற ஆரம்பித்தன. பார்ப்பனீயம் செத்துவிடுமோ என்ற பயங்கர நிலை ஏற் பட்டது. இவரது எழுத்துக்கள், கருத்துரைகள் தீக் கிரையாக்கப்பட்டன. எனினும் அவர்கள் வெற்றிபெற வில்லை. அவரது கருத்துக்கள் பவனிவர ஆரம்பித்தது.

ஒருநாள் இரவு. சாருவாகர் குடியிருந்த வீட்டிலே பெருந் தீ! வீட்டிற்குள் சாருவாகர்! வெந்தணலில் அவரது உடல் சாம்பலாகியது. வைதீகம் அவரைப் பற்றிய எல்லா ஆதாரங்களையும் அக்கினிக்கு இரையாக்கியது. எல்லா ஆதாரங்களையும் அழித்தது. பார்ப்பனீயம் சிங்காதனம் ஏறியது — இன்னும் சிரஞ்சீவியாக இருக்கிறது. சாருவாகரைப் பற்றிய ஆதாரங்களெல்லாம் தத்துவ விளக்கங்களில் அவருக்கு விரோதமாய் எழுதியிருப்பவைதான். வைதீகம் அன்றைய தினம் சாருவாகரை ஒழித்ததனுல் அந்தக் கருத்துக்கள் ஒழிந்து விட்டன என்று கருதியது. சாருவாகரின் கருத்துக்கள் சாகாது. வெற்றி பெருமல் போகாது என்பதை அவரது சாம்பல் புழுதி நினைவுபடுத்தியதை வெற்றிக் களிப்பிலே மறந்துவிட்டனர். ஒன்று சொல்வோம், வைதீகத்திற்கும் அதன் காவலர்களுக்கும்: "எதை அவர்கள் அழிக்க முயன்றனரோ அது வெந்தணலில் வேகாதது, வெள்ளத்தாலே போகாதது, வெற்றி பெறப்போவது."



# கவிழ்ந்த படகு

"ஆண்டவன் என்பது அபத்தமாமே!"

"கடவுள் என்பது கற்பனைச் சொல்லாமே!"

"கர்த்தரின் போதனை கயமை நிறைந்ததாமே!"

"கிருத்துவ மதமே மூட நம்பிக்கையாம்!"

"புரோகிதர்கள் மக்களின் சுதந்திரத்தைச் சாகடித்த புல்லுருவிகளாம்"

"அவ்வளவு தானே?"

"நாத்திகத்தின் அவசியமாம்—ஏட்டின் பெயர்"

"அதற்கு முன்னுரை மற்றொரு மடையன் தீட்டியிருக்கிறான்"

வாதிட வரலாமாம்! வெளியீட்டில் கண்டிருப்பவை சிந்தனையின் விளைவாம். விமர்சனம் செய்யலாமாம். மறுப்புக்கூட வெளியிடலாம்"

அறைகூவல் கூட விட்டிருக்கிறானா அக்கிரமக்காரன்? அவ்வளவு துணிச்சலா!"

1811-ம் ஆண்டு ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்திலே அன்றோர் நாள் ஒரே அமளி. எங்கும் பரபரப்பு மாணவர்களெல்லாம் திருதிருவென்று விழிக்கின்றனர்.

பேராசியர்களின் முகத்திலே அசடு வழிகிறது. குருமார் களின் கண்களிலே கோபம் பொங்குகிறது.

இவ்வளவும் இதைவிட அதிகமாகவும் அன்று அங்கு சந்தித்தவர்கள் எல்லோரும் பேசினர். எல்லோ ருடைய கரங்களிலும் 'நாத்திகத்தின் அவசியம்'' (Necessity of Atheism) என்ற துண்டு வெளியீடு இருந்தது. ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகம் என்றாலே யாருக்கும் புரியும் கர்த்தரின் காவலர் உறைவிடம் என்பது. கத்தோலிக்கக் குருமார்களின் கோட்டை ஆண்டவனின் நேர்புத்திரர்கள் என்று நினைத்துக் கொண் டிருப்பவர்கள். அப்படிப்பட்டவர்களின் கண்களிலே எவனோ ஓர் விதண்டாவாதி வெட்டிப்பேச்சைக் கிளப்பு வது என்றால் விட்டுவிட முடியுமா? பிறகு மார்க்க போதகர்கள் என்ற பட்டம்தான் அவர்களுக்கு எதற்கு! ஆகவேதான் "நாத்திகத்தின் அவசியம்'' என்ற துண்டு வெளியீட்டைக் கண்டவுடன் துடித்தார்கள்.

பரமனுக்கு எதிராக எந்த பாவி பழி கற்பித்தாலும், போராடவேண்டிய அவர்கள், ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்திலிருந்தே ஒருவன் அத்தகைய நச்சை உமிழ் கிறான் என்றால் பார்த்துக் கொண்டிருக்க முடியுமா! ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகம் என்றால் எவ்வளவு அருமையான இடம். ஆதிக்கம் தழைப்பதற்காகவே இருக்கும் ஆஸ்ரமம். இப்படிப்பட்ட இடத்திலே இந்த இழிச் செயலா, எவ்வளவு திமிர் அந்தத் துடுக்கனுக்கு, அடக்கியாக வேண்டும் இல்லாவிட்டால் ஆண்டவன் பெயருக்கே மாசு; ஆக்ஸ்போர்டுக்கே அபகீர்த்தி என்று நினைத்தனர். அதுவும் வயது வந்த வயோதிகன் கூட அல்ல. சின்னஞ்சிறுபிள்ளை. வாலிபன், மாணவன் இப்படியா "பகுத்தறிவு'' ச் சோதனை புரிவது என்று ஆசிரியர்களான பாதிரிகள் பதைபதைத்தனர்!

இவ்வளவு குழப்பத்திற்கும் காரணம் "நாத்திகத்தின் அவசியம்'' என்ற வெளியீட்டைப் பிரசுரித்துப் பேரா

சிரியர்கள், குருமார்கள், பாதிரிகள் ஆகிய பலருக்கும் வழங்கியிருந்தான் ஓர் மாணவன். இந்த நாசக் கருத்து மாணவர் மத்தியிலே பரவினுல் மதம் என்னுவது என மருண்டனர். கல்லூரித் தலைவரும் ஒரு பிரதியைப் படித்தார் "எங்கே, கூப்பிடுங்கள் அந்த மாணவனை" என்றுர். எதிரே ஒரு பையன் வந்து நின்றுன். ஒல்லியான உருவம், நீண்ட தலைமயிர், ஒழுங்காக உடுத்தப் படாத ஆடை, வெண்மையான அழகிய முகம், அகன்ற கண்கள், பெண் போன்ற சாயல், இவனு இருதயத்திலே இவ்வளவு எண்ணங்களை வைத்துக்கொண்டிருப்பவன் என்ற ஐயம் ஏற்படுகிற அளவுக்கு அவ்வளவு அப்பாவி போல் காணப்பட்டான்.

"நீதானு இதைத் தீட்டியது?"

"ஆம்"

"இறைவனை பழித்து இப்படி எழுதலாமா?"

"அறிவு என்னைத் தூண்டியது, எழுதினேன்"

"சரியென்று சாதிக்கிருய், சண்டாளா, சர்வேஸ்வரனுக்கு விரோதமல்லவா!"

என் சிந்தனையின் கருவூலம் அவை, அறிவை அடகுவைத்து ஆட்டுமந்தையாகச் சொல்கிறீர்களா?"

"அட பாவி! தவறு என்று ஒத்துக் கொள்ள மாட்டயா? அவ்வளவு முரட்டுத்தனமா?"

"தங்களுக்காக நான் மனமார நம்பும் கருத்தைத் தவறுடையது என்பதா?"

"எனக்காக அல்லவே ஆண்டவனுக்காக......?"

“ அங்கேதானே அபிப்பிராய பேதம் ! ”

அபிப்பிராய பேதத்திற்கு ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்திலே இடமில்லை ”

“ அறிவுக் கேணிதானே பல்கலைக்கழகம், நாலா விதக் கருத்துக்களும் நடமாட வேண்டமோ ? ”

“ கேணியிலே ஓடுகிற நீரைத்தான் பருகவேண்டும் சாக்கடையைக் கலக்கக்கூடாது ”

“ அப்படியென்றால் ! ”

“ ஊரிலே யாராவது உன்மத்தர்களுக்குக் கூறு உன் உபதேசத்தை. இந்த இடம் உனக்கு உதவாது, பல் கலைக் கழகத்திலிருந்து உன்னை விலக்கியிருக்கிறோம். இந்த நிமிடத்திலிருந்து நீ மாணவனல்ல ”

கல்லூரித் தலைவர் தீர்ப்புக்கூற பக்கத்திலே இருந்த பாதிரிகளும் தலையசைத்தனர். படிக்கவந்த மாணவனை பல்கலைக் கழகம் பட்டம் கொடுத்து அனுப்பவில்லை, விலக்கியது, விரட்டியது படிப்பு முடியாத முன்னம் ஆனால், “ நாத்திகன் ” என்ற பட்டத்தைக் குற்றமாகச் சாட்டி.

மாணவன் நினைத்தான் பல்கலைக்கழகத்தில் படிக்கப் போகிறோம். அங்கு விவாதம் நடக்கும், விவேக விளக்கம் இருக்கும், அறிவு இருக்கும், ஆராய்ச்சி இருக் கும், சந்தேகங்களுக்குத் தெளிவு பிறக்கும், அறிவுமலர வழி அமையும் என்றெல்லாம். ஆனால் அவன் அங்கே கண்டது, அவர் கல்லூரித் தலைவரானால் எப்படி யிருப்பார், இந்தப் பேராசியரிடம் என்ன தவறு இருந்தது என்ற இந்த விவரத்தை. பாடப் பகுதியிலே கர்த்தரின்

பெருமையை, கன்னிமேரியின் கருணையை, கத்தோலிக்க மதத்தின் அருமையைத்தான் கண்டான். அவனது கனவு கலைந்தது. அவனது அறிவுத் தாகத்தைத் தணிப்பதற்கு மார்க்கம் காணோம். அவனுக்கு இலக்கியங்களிலே ஏராளமான ஆசை. மணிக்கணக்கிலே புத்தகங்களிலே மூழ்கி விடுவான். கற்பனைஉள்ளம் நிறைந்தவன். காவியங்கள் புனைவதிலே அவனுக்கு ஒரே வெறி. தத்துவ விசாரணையிலே அவனுக்கு மிகுந்தவேட்கை. நாட்டிலே இருக்கிற புரோகிதர்களும் மன்னர்களும் மக்களின் உரிமையை நசுக்கி விட்டார்கள் என்பது அவனது கருத்து. மனித சமுதாயம் கட்டுபாடற்று சுதந்திரமாய் விளங்கவேண்டுமென்பது அவனது கொள்கை. எதையும் பகுத்தறிவுக் கண்கொண்டு பார்க்கவேண்டுமென்று விரும்பினன். அவனது இந்த எண்ணங்களுக்கு பல்கலைக் கழகத்திலே இடம் காணோம். எனவே அவனது கருத்துக்களை வாதிக்க வழியில்லை; அடக்கி வைக்கவும் முடியவில்லை. ஆகவேதான் "நாத்திகத்தின் அவசியம்" என்ற வெளியீடாக வெளியிட்டான். நண்பர்களுக்குக் கடிதம் எழுதுகிற நேரத்திலெல்லாம் பக்கம் பக்கமாக தனது கொள்கைகளை வலியுறுத்தி வந்தான். அந்த இளைஞனைப் பல்கலைக் கழகம் தாங்கிக் கொள்ள முடியவில்லை. "வெளியே போ" எனவிரட்டியது. இந்த வேதனையைத் தாங்கிக்கொண்டு "வெளியே போ" என விரட்டியது. இந்த வேதனையைத் தாங்கிக்கொண்டு வெளியே வந்த மாணவனின் பெயர் பெர்சிபைஷி ஷெல்லி ( Percy Bysshe Shelly ) இன்று ஆங்கில இலக்கிய வானில் மங்காத தாரகையாய் ஒளிவிடுகிருனே கவிஞன் ஷெல்லி, அதே ஷெல்லிதான் இவன். இவனைக் கல்லூரியிலிருந்து விலக்கியது தகாது என வாதாடினுன் மற்ருெரு மாணவன். அவன் தான் இவனது அருமை நண்பன் ஹாக் (Hogg) என்பவன். ஹாக்தான் இவன் எழுதிய "நாத்திகத்தின் அவசியம்" என்ற ஏட்டிற்கு முன்னுரை தீட்டியவன் இவனுக்கும் அதே கதி கிடைத்தது.

நண்பர்கள் இருவரும் பல்கலைக் கழகத்திலிருந்து இலண்டன் பயணமானார்கள். வீட்டிற்குச் செல்ல வில்லை. ஷெல்லியின் தந்தை செய்தியைக் கேள்விப்பட்டார். செந்தேள் கொட்டியது போலிருந்தது அவருக்கு ஷெல்லியின் செய்கை. டிமோதிஷெல்லி (Timothy Shelley) என்பது அவர் பெயர். சஸ்ஸெக்ஸ் பகுதியிலே பில்டுப்ளேஸ் என்ற இடத்தைச் சேர்ந்தவர். சிறியசீமான் வசீகரமாக வாழ்வதற்கு வசதியிருந்தது. விக் கட்சியிலே உறுப்பினர். தனது மைந்தன் பல்கலைக் கழகத்திலே படிக்கிறான், பட்டம் பெறுவான். பாராளுமன்ற உறுப்பினனாவான். விக் கட்சியினுக்கு தூணாக அமை வான். குடும்பத்தின் கீர்த்தியைக் காப்பான். பிரஞ்சு, ஜெர்மனி மொழிகளில் வல்லுனனானவான், வையகம் தன் பிள்ளையை கவிஞனென்று வாழ்த்தும் என்றெல்லாம் கனவு கண்டவர். இவனது கவிதா வெறியும் காவியப் புலமையும் கடவுளை நிந்திக்கும் 'கயவனுக்கும்' என்று அவர் கருதவில்லை. சிறுவனாக ஈட்டன் (Eten) பள்ளியிலே பயின்ற நேரத்திலே இத்தகைய இடரான எண்ணங்களை கொண்டிருக்கின்றானே என்று எண்ணியதுண்டு ஆனால் ஆக்ஸ்போர்டு அவனை அருமையான பிள்ளையாக்கும் என்று நினைத்திருந்தார்.

சீட்டாடிக் கொண்டிருந்தான் சீமான் வீட்டுப் பிள்ளைகளுடன் என்று யாராவது சொல்லியிருந்தால் சீறியிருக்கமாட்டார் நளினிகளுடன் நடன விருந்து நடத்திக்கொண்டிருந்தான் உங்கள் பிள்ளை என்றிருந்தால் நாகரிகத்தின் அம்சம் என்றிருந்திருப்பார். மங்கையரும் மதுக்கோப்பையாய் அலைகிறான் உங்கள் மைந்தன் என்றிருந்தால் மருண்டிருக்க மாட்டார். இவையெல்லாம் ஆக்ஸ்போர்டு மாணவர்களின் அன்றாட நிகழ்ச்சிகள் என்றிருந்திருப்பார். ஆனால் ஆண்டவன் இல்லையென்கிறான். அரசு கூடாது என்கிறான். அறிவு வேண்டும் என்கிறான் என்ற இந்த விஷயம் அவருக்கு

வேம்பெனக் கசந்தது. வீட்டிற்கு வா என ஷெல்லியை அழைத்தார். அவனுக்கோ வீடு சிறைச்சாலையாய் இருந்தது. கையிலே கொஞ்சம் பணமும் இருந்தது. இலண்டன் வாசியானுன் தந்தை பணம் அனுப்பு வதையும் நிறுத்திவிட்டார் கோபத்தால். அவனது சகோதரிகள் உதவிய கொஞ்சம் பணத்தைக் கொண்டு வாழ்க்கையை ஓட்டினுன். இதன்பிறகு அவன் வாழ்வு முழுதும் ஒரே புயல் வீசியது. அந்தப் புயலிலிருந்து அவன் மீளவேயில்லை.

ஹாரியட்க்ரோவ் என்ருேர் அழகி இவனின் அத்தை மகள். இவனுக்கு அவள்மீது அடங்காத காதல். அவளுக்கும் அப்படித்தான் இவனது சொந்த ஊரிலே வாழ்ந்தாள் அந்த சுந்தரி. குழந்தை முதல் இருவருக்கும் நட்பு. கூடிக்குலாவி மகிழ்ந்திருந்தனர். குட்டிக்கதைகள் சொல்லுவான் குமரிகளைக் கூட்டி வைத்துக்கொண்டு குழந்தை க்ரோவ் குமரியானுள். பெற்ருேர் வேற்றூர் சென்றனர். இவர்களது நட்புபட்டுப்போகவில்லை. கடிதங்கள் அவர்களின் தூதுவர்களாயின. ஷெல்லி, சிங்காரக்கவி புனைந்து அனுப்புவான். அவளது சிற்றிடை சிரிப்பொலி, சிவந்த அதரம் இவை பற்றிமட்டும் அவன் மடல் தீட்டவில்லை. அவனது பகுத்தறிவுக் கொள்கைகள், பழைமைப் பலிபீடத்தைத் தகர்க்கவேண்டிய அவசியம், மார்க்கத்தைப் பற்றி அவனது எண்ணங்கள் ஆகியவைகளைப் பற்றியெல்லாம் எழுதி அனுப்பினுன். இந்தக் கருத்துக்களைக் கண்டு பாவை பயந்தாள். அவளுக்கு அவன்மேல் ஆசைதான். ஆனுல் அவனது நாத்திகவாதம் அவளுக்குப் பிடிக்க வில்லை மெள்ள ஓர்நாள் மாதா பிதாக்களிடம் காட்டி விட்டாள் அவனது கடிதக் குவியலை. மகளின் மகிழ்ச்சி யான வாழ்விற்கு இந்த இலட்சிய புருஷன் லாயக்கில்லை என்றனர். ஹாரியட்க்ரோவும் அலங்காரி; ஆடம்பரத்தில் அதிக மோகமுள்ளவள். அந்தஸ்தில் பிரியமுள்ளவள்.

அவளுக்கு இந்த அதிசய புருஷன் எங்கே பிடிக்கப் போகிறது? "நமது திருமண நன்மையல்ல" என்று மறுத்துவிட்டாள். வேறொருவனை மாலையிட்டாள். கொண்டிருந்த கொள்கைக்காக நேசித்த கோமள வல்லியையே இழந்தான். இந்த வேதனை அவன் உள்ளத்தை ஆயிரம் ஈட்டிகொண்டு தாக்குவதுபோல் இருந்தது. இந்த பிரிவைப்பற்றி, அவள்மீது கொண்டிடிருந்த அடங்காத ஆசையைப்பற்றி அருமையான சொல்லோவியங்கள் புனைந்தான். அவனது இதய தாபத்தை எதிரொலிக்கும் இலக்கியம் அவை!

•

இலண்டனிலே இருந்தநேரத்தில் ஹாரியட் வெஸ்ட் புரூக் (Harried West Brook) என்பாளது தோழமை கிடைத்தது. அவள் பள்ளிச்சிறுமி. 16 வயதிருக்கும். அவளுக்கு ஷெல்லியின்மீது ஒரே கவர்ச்சி. இந்த சூழ் நிலையில் ஹாரியட்டின் பெற்றோர் அவளைத் தொடர்ந்து படிக்குமாறு வற்புறுத்தினர். அவளுக்கோ படிப்பில் மனம் நாடவில்லை. ஷெல்லிக்கு கடிதம் தீட்டினாள் அவனும் அவள் தந்தையை வேண்டினான், பயனில்லை. கடைசியாக ஷெல்லி நேரே வந்தான். அவளது வாடா மேனிவாடியிருந்தது. அவள் கண்கள் குளமாகியிருந்தன. கன்னங்களிலெல்லாம் நீர்த்தாரை வடிந்தது. புட்டுப் புட்டுப் புகன்றாள் அவள் தன் காதலை. இதயத்தைத் திறந்து காண்பித்தாள். ஷெல்லியே மணம் செய்துகொள்ள வேண்டும் என்று பிடிவாதம் பிடித்தாள். இவனது நிலைமையோ சங்கடமாகிவிட்டது. இவனுக்கோ அவள்மீது காதல் அரும்பவில்லை. ஆனாலும் அவளது நிலைமை இவனை செயலாற்றத் தூண்டியது. சனியன்களான பெற்றோரிடமிருந்து அந்தப் பேதைப் பெண்ணை விடுவிக்க வேண்டுமென்று உணர்ச்சி அவனுக்குக் கிளம்பியது. விடுதலை வீரன் சமுதாயத் தொண்டன் என்றிருக்கவேண்டு மென்றிருந்தது. அந்தப் பூங்கொடியாளுடன் பறந்து விட்டான்

பெற்ருேருக்குத் தெரியாமல்! மனப்பதிவுநிகழ வேண்டு மென்ருள் மாது. எடின்பர்க்கிலே திருமண ஒப்பந்தம் செய்துகொண்டு 19 வயது மணமகன் ஒருவனும் 16 வயது மணமகள் ஒருத்தியும் வெளியே வந்து கொண்டிருப்பதைப் பார்த்தனர்.

குடும்பவாழ்வு ஆரம்பமாகியது. குதூகலம் என் னவோ குறைவுதான். தந்தை கொஞ்சம் பணம் தந்தார் கவி புனேவதிலே காலம் தள்ளினுன். அழகை அவன். ஆராதனே புரிந்தான். காதல் அவனது ஒப்பற்ற இலட் சியம். "புனிதம் என்ற பெயர்சொல்லி, வேலியிட்டு எல்லா அக்கிரமங்களேயும் மறைக்கிருர்கள் ஆண்டவன் பெயரைச் சொல்லி" என்று கவி பாடினுன்! "மன்னர் புரோகிதர்கள், கபடவேஷதாரிகள், மனிதப் பண்பை மோக்கிலே கிள்ளியெறிந்தவர்கள்" என்ருன். "யுத்தம் என்பது ராஜதந்திரியின் விளேயாட்டு, புரோகிதனின் மகிழ்ச்சிக் கருவி, வாடகைக்கு வாங்கப்பட்ட கொலே காரர்களின் வாணிபம்" என்ருன். அவனது அரசியல் கருத்துக்களேத் தொகுத்து உரிமைப் பிரகடனம் (Declaratoin of Right) என்ற வெளியீட்டாக்கினுன். இதில் அரசாங்கம் அங்கீகாரம் பெற்றதல்ல. மனிதனின் கைகளில் விலங்கு மாட்டியிருக்கிறது என்றெல்லாம் விளக்கியிருந்தான். அந்த வெளியீட்டை விநியோகித்துக் கொண்டிருந்த இவனது வேலேக்காரனே சர்க்கார் கைது செய்து 6மாதம் கடுங்காவல் விதித்தது. ஷெல்லியின் அரசியல் நடவடிக்கைகளே கண்காணித்தது அரசாங்கம்.

ஹாரியட் இவனே மணந்தது இவனது இலட்சிய வாழ்விற்கல்ல, இன்பபுரி பயணத்திற்கு! ஆனுல் இவன் உலகமோ எங்கெங்கோ அலேஓசையில், தாரகைகளில், இயற்கையின் எழிலில், பனிக்கட்டியின் வெண்மையில், பஞ்சைபராரியின் பரிதாபவாழ்வில், ஏழையின் துயரில் சென்றது. அவளோ ஆணழகனுடன் ஆனந்தபுரியில்

அரசியாக விளங்கவேண்டும் என நினைத்தாள். பள்ளம் விரிந்தது. வேறுவழி நடக்கலாயினர்.

ஷெல்லியின் மனமும் அவளுடன் இசையவில்லை. மேரிகாட்வின் என்று ஒருத்தி இவனுக்குப் பிரியமுள்ளவளானாள். அவளுடன் பாரிசுக்குப் பறந்துவிட்டான் எங்கெங்கோ சுற்றிவிட்டு வறுமை அலைக்கழிக்க இலண்டன் வந்தான். மனைவியையே பொருளுதவி கேட்டான். சில நாளில் அவளும் தற்கொலை புரிந்து கொண்டாள். வாழ்வே சூறுவளியாய்விட்டது. தனிமையை விரும்பினான். அவனது கவிதைகளைப்பற்றி இங்கிலாந்துப் பத்திரிகைகளிலேகண்டனமாரி பொழிந்தது, அவனது கருத்துக்கள் கேலிக்கூத்தாக்கப்பட்டது. வீட்டிலே விரோதம், நாட்டிலே நாஸ்திகன், மனைவித்துரோகமிழைத்தவன், நண்பர்களுக்குப் பகைவன், உற்றார் உறவினருக்கு வேண்டாதவன். பல்கலைக்கழகம் விரட்டிய மாணவன் என்ற இவ்வளவையும் தாங்கிக்கொண்டு 1818, மார்ச்சு 11-ம் நாள் இங்கிலாந்தைத் துறந்து பொன்னாடு எனப்போற்றிய இத்தாலிக்குச் சென்றான். திரும்பி இங்கிலாந்திலே அடிவைக்கவேயில்லை. ஆல்ப்ஸ் மலைச்சாரலும், அழகியமாநதிகளும், அலைகடலும், ஆரண்யவெளிகளும் அவனுக்கு ஆனந்தபுரியாய் இருந்தது. தனிமையை நாடி தவித்தான் பைரன், கீட்ஸ் போன்றாரின் நேசமும் உறவும் அவனுக்குக் கிடைத்தன. படகோட்டுவதிலே, பாக்கள் புனைவதிலே தனது காலத்தைக் கழித்தான்.

1822 ஜூலை 7-ம் நாள் மாலை நேரம், இத்தாலியக் கடற்கரை ஷெல்லி அலைகளைக் கிழித்துக்கொண்டிருந்த படகிலே சென்றுகொண்டிருந்தான். மணி 6 இருக்கும்; வானமண்டலத்திலே கருமேகம். மேகங்கள் திரண்டன. பெரிய புயற்காற்று, கடுமழை பொழிய ஆரம்பித்தது. கடலும் வானமும் கைகுலுக்கியது. பேரிடி சப்தம், கண்ணைப் பறிக்கும் மின்னல்! கடலிலே கலம். கலத்

திலே ஷெல்லி. கலம் திண்டாடியது. சலத்திலே சூரு வளி மோதியது. படகு கவிழ்ந்தது. கடல் தனது அலைக்கரங்களால் அறிஞன் ஷெல்லியின் உடலைத்தழுவிக் கொண்டது. உயிரைக் குடித்தது. பத்து நாட்களுக்குப் பிறகு மணலோரத்திலே ஒல்லியான ஓர் சவம் கிடந்தது. அதன் சட்டைப் பையிலே இலக்கியப் புத்தகம் ஒன்று இருந்தது. கடலலைகள் மணலிலே பிணத்தை இருத்தி விட்டு 'ஓ' வென்று அலறிக்கொண்டிருந்தன.



# கேரள கீதம்

"அப்பப்ப! அந்த தினத்தை நினைத்துக்கொண்டாலே, ஒரே திகிலாய் இருக்கிறது. எனது வீடு வெறி பிடித்த முரடர்களால் சூறையாடப்பட்ட அந்தக் கோரக் காட்சி--உடம்பே சில்லிட்டுவிடுகிறது. இப்போதுகூட நான்மட்டும் அவர்கள் கரங்களிலே சிக்கியிருந்தால்"

"இயற்கை தந்த எழில் மலர் ஒன்று நாசமாகி இருக்கும். மந்தியிடம் கிடைத்த மலராகி யிருப்பீர்கள் அம்மணி!"

"வீணுக உள்ளத்தை அலட்டிக்கொள்ளாதீர்கள், நிம்மதியாக இருங்கள்"

"நீங்கள் தந்த அடைக்கலம்தான், இந்த துர்ப்பாக்கியவதியை உயிருடன் உலவவைத்திருக்கிறது. உங்களது அன்பிற்கும் பரிவிற்கும் பரிதாபத்திற்குரிய நான் என்ன கைம்மாறு செய்யப்போகிறேன்"

"இது என்னம்மா பெரிய உதவி? மனித உள்ளம் படைத்த எந்த ஆண் மகனும் செய்யக்கூடிய சாதாரண செயல்தானே! அபலையான ஓர் பெண், அனுதரவாக நிற்கும்போது—அதுவும் அடைக்கலம் கேட்கும்போது "முடியாது" என்று மிருக உள்ளம்படைத்த மூர்க்கன் கூட கூறமாட்டானே!"

"என் இதயம் நன்றியறிதலால் மலர்கிறது"

"ஏன் அம்மா, இவ்வளவு பாராட்டுதல்கள்?"

"அம்மா, அம்மா என்று அழைக்கிறீர்களே, நான் உங்கள் தாயா? உடன் பிறந்திருந்தால்கூட அருமைத் தங்கையே என்று பெயர் சொல்லி அழைத்திருப்பீர்கள்."

"பிற பெண்களை தாயாக பாவிப்பதுதானே அம்மணி, முறை! அதுசரி, தங்கள் பால் வதனத்திலே ஏன் எப்போதும் துயரக் கோடுகள் நிழலிடுகின்றன? எனது உபசரணையில் ஏதாவது குறை.........."

"குறை என்றுகூடச் சொல்லலாம்—எனது கலங்கிய முகம், எனது வேதனையைத்தான் விளம்பரப்படுத்திக்கொண்டிருக்கிறது. ஒரே ஒரு வேண்டுகோள். அதனை நிறைவேற்றமுடியுமா?"

"முடியுமானால் நிறைவேற்றுகிறேன், கூறுங்கள் அம்மா"

"முடியாமலென்ன! உங்கள் வீட்டிலே உலவுகிறேன் இப்போது, ஆனால், தங்கள் இதய வீட்டிலே உலவும் உரிமை வேண்டும் எனக்கு, அதுதான் என் ஆவல் நிறைந்த வேண்டுகோள்."

"புரியவில்லையே, அம்மா."

"புரியாததுபோல் தெரியவில்லையே! தங்கள் மனைவியாக என்னை........"

"தாங்களோ நம்பூதிரி பிராமண குலம். நான்......"

"தீண்டாத ஜாதி—செருமர் வகுப்பு, தாழ்த்தப்பட்ட குலம், இவை அத்தனையும் தெரிந்துதான் சொன்னேன். தாங்கள் தீண்டாத ஜாதி என்பதற்காக என் உள்ளம் உங்களைத் தீண்டாமல் இல்லையே!"

"பாவ காரியமல்லவா அம்மணி! நீயோ பார்ப்பன குலப் பாவை. நானோ பழங்குடி மகன். நாலு ஜாதி நாதன் படைப்பல்லவா! அதை அவமதித்தால் நரக மல்லவா சம்பவிக்கும். நம்பூதிரி பார்ப்பனப் பெண்ணுக் கும் பறையனுக்கும் திருமணம்! இது சாத்தியமா?"

"ஏன் சாத்தியமில்லை, அன்பரே?"

"சாஸ்திர விரோதமல்லவா அது. ஆகமங்களிலே அதற்கு ஆதாரமேது? தீராத பழியல்லவா சூழும்?"

"ஒரு பெண்ணை வஞ்சித்தீர்கள் என்ற பழி மட்டும்?"

"இது எப்படிப் பழியாகும்? சாஸ்திர விரோத மான காரியத்திலிருந்து அஞ்சி விலகினேன் என்றுதான் பொருளாகும்."

"உமது மொழிகள்தான் ஏதேதோ கூறுகிறதே தவிர உமது விழிகள்"

"மறைப்பானேன்; நானென்ன வேதாந்தியா? ஐம்புலனை அடக்கி, அத்தனையையும் துறந்து, தவம் செய்து கிடக்க? அழகுக் குவியல் தந்த விக்ரகம் என் எதிரே இருக்கும்போது, நான்மட்டும் என்ன மரக் கட்டையா? மனிதன்தானே! எனது விலாப்புறத்தைக் கொத்தும் வேல்விழிகள், வேத வேதாந்தியையும் கலக்கி விடுமே! மனதிற்குள்ளே நேசிக்கிறேன்; நான் மகேஸ் வரன் படைப்பை மீறக்கூடாதே என்று மருள்கிறேன். சர்வேஸ்வரன் ஏற்பாட்டை இந்தச் சண்டாளன் மீறி னான் என்ற அபகீர்த்திக்குப் பயப்படுகிறேன்."

"சர்வேஸ்வரன், நாதன் எல்லாம் என்னைப்பொறுத்த வரையில் நீங்கள்தான். தாங்கள் என்னை அபாயத்தி லிருந்து காப்பாற்றி அடைக்கலம் தந்தபோது, எங்கே போயிருந்தார் அச்சர்வேஸ்வரன்? ஏன் தடுக்கவில்லை?"

"நீ கூறுவது சரியாகத்தான் இருக்கிறது"

"கேளுங்கள் அன்பரே, ஆண்டவன் படைப்பிலே பேதம் இருக்கமுடியாது. யாரோ சுயநலக்காரர்கள் தாங்கள் சொகுசாக வாழ சிருஷ்டித்த சூது நிறைந்த இயந்திரம் இந்த ஜாதி ஏற்பாடு. சாஸ்திரம், ஆகமம் எல்லாம் அவற்றிற்கு அரண். காடு களைந்து, வாய்க்கால் வெட்டி, வரப்பு எடுத்து, கழனி அமைத்து நெல் விளைவிக்கும் கூட்டம் தாழ்ந்த ஜாதியாம். உல்லாசமாய், உழைக்காது ஒய்யாரமாய் வாழும் கும்பல் உயர்ந்த ஜாதியாம். இதுவெல்லாம் எத்தர்கள் ஏமாளிகளை வஞ்சிப்பதற்கு வெட்டிய சதிக்கிடங்கு கேரள மக்கள் எல்லோரும் ஒரே ஜாதிதான். பேதம் பாராட்டுவது பேதமை!"

"அப்படியானால் ஜாதி என்னுவது?"

"சவக்குழிக்குப் போவது"

"நம்மால்மட்டும் முடியுமா"

"ஏன் முடியாது! நமது திருமணத்தின்மூலம் புதியதோர் புரட்சி பூக்கச்செய்வோம். வர்ணாஸ்ரம எதிர்ப்பின் வழிகாட்டிகள் ஆவோம். சமரச போதனையின் தூதுவர்கள் நாம். உங்களுக்கு என்மீது ஆசை இருக்கிறது. ஆனால் சம்பிரதாயத்தை உடைப்பதா என்ற அச்சமும் இருக்கிறது. ஆசைக்கும் அச்சத்திற்கும் இடையே போராடுகிறார் எனது காதலர். நானே அவரைக் காப்பாற்றுகிறேன். உயர் ஜாதி என்ற கௌரவத்தைக் களைந்து என்னைக் காணிக்கையாக்குகிறேன். ஏற்றுக் கொள்ளுங்கள்."

"தியாகவல்லி நீ! தீரனாக்கிவிட்டாயே என்னை"

"தியாகவல்லியல்ல நான். கோழையாய் இருந்த எனது காதலரை வீரராக்கிய தீரவல்லி."

"கேலிதான் உனக்கு சம்பிரதாயத்தை சுக்கு நூருக்கிப் புதிய சமத்துவ கேரளம் உருவாவதற்கு பாதையல்லவா அமைத்துவிட்டாய். உன்னை என்ன சொன்னாலும் தகும். நவகேரளத்தின் புரட்சிகீதம் நீ"

"கீதத்திற்குப் பொருள் இருந்தால்தானே பொலிவு"

"நமது திருமணந்தான் பொருள்நிறைந்த கீதமாகி விட்டதே!"

"கண்ணாளா! கவலை தீர்ந்தது. நெடிய இரவு முடிந்தது. உவகை உதயமாகிவிட்டது. எனது வாழ்வில்"

* * *

1921-ஆம் ஆண்டு மலையாள மண்டலமே அல்லோல கல்லோலப்பட்டது. மாப்பிள்ளைக் கலகத்தின் விளைவாக நாசம் எங்கும் நர்த்தனம் புரிந்தது. குடும்பங்களிலே மாதர்கள் கோவெனக் கதறினர். ஓர் நம்பூதிரிப் பார்ப்பனரின் வீடு கொள்ளையிடப்பட்டது. வீட்டிலேயிருந்த கோமளவல்லி ஒருத்தி தப்பித்து, தாழ்த்தப்பட்ட ஜாதியான செருமர்குல வாலிபனிடம் சரண் புகுந்தாள். அவனது வாஞ்சை, அவளது உள்ளத்தில் காதலைத் தூவியது; அவனுடைய உள்ளத்திலும்தான்! ஆனால் வைதீகத்திற்காக பயந்தான். பாவகாரியமென்று எண்ணி! எனினும் அந்த வனிதா ரத்தினமே வைதீக விலங்குகளை உடைத்து இழிஜாதி மகனை இன்பக் கணவனாக ஏற்று மணம் செய்துகொண்டாள்.

எங்கே, எப்போது நடந்தது என்று கேட்கத்தோன்றும். நடக்காததுமட்டுமல்ல-நாடகத்திலேகூட அல்ல? ஜாதி ஏற்பாடு ஒழியவேண்டும். அது சமுதாயத்தை செல்லரிக்கிறது. சமத்துவம் ஓங்கவேண்டும் என்ற கோட்பாடுகளை மக்களுக்குப் புகுத்துவதற்காக மேலே

யுள்ள கருத்தடங்கிய கவிதையை 'துரவஸ்தா' (Duravastha) என்ற தலைப்பிலே பிரசுரித்தார் ஓர் மலையாளக் கவிஞர், சுமார் முப்பதாண்டுகளுக்கு முன்பு, அவரின் பெயர் குமரன் ஆசான் என்பது. இந்தக் கவிதை ஜாதி வெறியர்களிடமிருந்து கோபக்கனலைச் சம்பாதித்துத் தந்தது. குமரன் ஆசான்மீது வெறிநாய்கள்போல் வைதீகம் சீறியது. பார்ப்பன மங்கைக்கும்–பறையர் ஜாதி மகனுக்கும் விவாகம் என்று கற்பனையில் எழுதுவதுகூட பொறுக்கமுடியாது என்று உறுமினர். ஆனாலும் கவிஞர் தனது பணியைத் தொடர்ந்து செய்தார். தனது ஒப்பற்ற கவிதா சேவைமூலம் உன்னத இடத்தைப்பிடித்தார், மலையாள இலக்கிய வானிலே, சுமார் இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் மகாகவி என்ற மங்காப் பெயரை உலகிலே விட்டுவிட்டு மறைந்தவர், குமரன் ஆசான்.

கேரளத்தின் மறுமலர்ச்சி இயக்கம், மலையாள மொழிக்கு இருபெரும் கவிஞர்களை வழங்கியது. ஒருவர் குமரன் ஆசான், மற்றவர் வையக அமைதி மாநாட்டிற்கு சமீபத்தில் வார்சா யாத்திரை சென்றுவந்துள்ள மகா கவி வள்ளத்தோல் (Vallathol). குமரன் ஆசான் சமுதாயக் கொடுமைக்குப் பலியாகி தாழ்ந்த சமுதாயமாக, நசுக்கப்பட்டு, அடைக்கப்பட்டு, கொடுமைப் படுத்தப்பட்டிருக்கும் ஈழவ குலத்தைச் சார்ந்தவர். எனவே தாழ்ந்த ஜாதியாருக்கு இழைக்கப்படும் அக்கிரமங்களுக்கு எதிராக போராடும் சமுதாயப் புரட்சிக் கவிஞர் ஆனார். வள்ளத்தோல், உயர்ந்த நிலையில் இருந்தவர் கூட்டத்தில் உதித்தவர். எனவே, அரசியல் துறையிலே இருந்த அன்னிய ஏகாதிபத்தியத்தை எதிர்த்து அவரது கவிதைக் கொத்து தயாராகியது. ஒருவர் அரசியல் கிளர்ச்சியின் பிரதிநிதியானார். மற்றவர் சமுதாயப் புரட்சியின் தூதுவரானார்.

சின்னஞ்சிறு வயதிலே குமரன் ஆசானுக்கு அறிவு வேட்கை இருந்தது. இவரது இளமைக்கால நிகழ்ச்சிகள், இவரது ஆற்றலைப் புலப்படுத்தியது. தமிழ், மலையாளம், சமஸ்கிருதம் முதலிய மொழிகளிலே அவருக்கு நிறைய பாண்டித்யம் இருந்தது. S. N. D. P. என்று சொல்லப்படுகிற ஸ்ரீ நாராயண தர்ம பரிபாலன யோகத்தின் தலைவர் ஸ்ரீ நாராயணகுருவின் தொடர்பு இவருக்கு கிட்டியது. சமுதாயப் புரட்சிக்கு வேண்டிய நல்ல கருத்துக்களை அவர் மூலம் பெற்றார். இயற்கை எழிலை அழகின் அம்சம் என்று ஆராதனை புரியும் கூட்டத்தைச் சேர்ந்தவர் இவர் வாலிபப் பருவத்திலே மா, பலா, கமுகு,வாழை மரங்களெல்லாம் மரகதப் பந்தல் வேய்ந்ததோ என சந்தேகிக்கும் மனோகரத் தோற்றத்தைத் தோற்றுவிக்கும் மலையாள வயல் வெளிகளிலே, கோலக் குன்றுகளிலே, நீலம் கலகலவென சிந்துபாடும் சிற்றோடை அருகே, அலைஓசை ஒலிக்கும் கடலோரத்திலே மற்ற மற்ற இடங்களிலெல்லாம் இயற்கை எழிலிலே மயங்கி சுற்றித் திரிந்தார். இவையெல்லாம் அவரது கற்பனை உள்ளத்திற்கு நிறைய கவிதா சக்தியைத் தந்தது. பெங்களூர், சென்னை, கல்கத்தா போன்ற இடங்களில் பலநாள் வசித்தார். வங்கநாட்டிலே கொழுந்துவிட்டெரிந்த சமுதாயப் புரட்சி இயக்கம் அவரது உள்ளத்திலே தனது தாயகத்திலும் அத்தகைய பணிகளைச் செய்யவேண்டும் என்ற எண்ணத்தைத் தூவியது. தனது மக்களின் இழி நிலையை எண்ணினார். அவர்கள் உயர்த்தும் முயற்சிதான் தனது குறிக்கோள் என்று முடிவு செய்தார். ஸ்ரீ நாராயண குருவின் துணையுடன் 42 ஆண்டுகளுக்குமுன் S. N. D. P. என்ற ஸ்ரீ நாராயண தர்மபரிபாலன யோகத்தை நிறுவினார். இந்தக் கழகம்தான் இன்று கேரளத்திலே பிரம்மாண்டமான அளவிலே வளர்ந்துள்ளது. நாராயண குருவின் போதனையின் அடிப்

படையிலே "மக்களெல்லாம் ஒரு ஜாதி, ஒரே மதம், ஒரே கடவுள்" என்ற கொள்கை வற்புறுத்தப்பட்டது. செயல்திட்டமாக "யாரும் தங்கள் ஜாதிப் பெயரை சொல்லக்கூடாது, பிறரையும் ஜாதியை விசாரிக்கக் கூடாது, மனத்திலும் நினைக்கக்கூடாது" என்றவைகளை மக்களுக்கு நினைவூட்டியது. இந்த இயக்கத்தை நம்முடைய சுயமரியாதை இயக்கத்திற்கு ஒப்பிடலாம். இந்த இயக்கம் வளர ஆரம்பித்தவுடன் இலக்கிய உலகுக்கே குடியேறிவிட்டார் குமரன் ஆசான்.

மலையாள இலக்கிய உலகம் மேல் ஜாதிக்காரரின் 'ஏகபோக வாரிசாக' இருந்தது அந்த நாட்கள், கவிஞர் குமரனை அவர்கள் பட்டியலிலேயே சேர்த்துக்கொள்ளவில்லை. இன்னும் விசித்திரம், தீண்டாத ஜாதியைச் சேர்ந்த இவர், சமஸ்கிருதம் படிப்பது, சமஸ்கிருதத்திற்கு தீட்டு என்று கருதினர் அந்தத் திருப்பிரம்மங்கள். சண்டமாருதமென எழுந்த எதிர்ப்பைப் பொடியாக்கினார். தமது கவிதா ஆற்றலினால், இவருக்கு முன்பெல்லாம், மலையாளத்திலே பெரிய காவியம் எழுதினால்தான், கவிஞர் பெயர் எடுக்கமுடியும். மலையாள இலக்கிய வரலாற்றிலே, நடையிலே, முறையிலே, அமைப்பிலே மாறுதலை ஏற்படுத்திய பெருமை இவருக்கே சாரும்.

சிறு சிறு கவிதைகள் இயற்றி புதுமுறை புகுத்தினார். கவிதைக்குரிய பொருளும் இவருக்கு முன்பெல்லாம் மகாபாரதத்திலே இராமாயணத்திலே தோண்டி எடுக்கப்பட்ட சம்பவங்கள். இவர்தான் சமுதாய நிகழ்ச்சிகளைக் கவிதையிலே ஏற்றினார். சமுதாய சம்பவங்களையே தமது கவிதைப் பொருளாகக்கொண்டார். மாத்யூ ஆர்னால்டின் "ஆசிய ஜோதியை" (Light of Asia) மலையாளத்திலே மொழி பெயர்த்தார்.

சமுதாயப் புரட்சியில் அவருக்கு இருந்த மட்டற்ற ஆர்வம். அவரது இலக்கியத்திலே எதிரொலிக்கிறது.

ஜாதிக் கொடுமையை பின்வருமாறு கண்டிக்கிறார் அவரது பாடலிலே,

"குடும்பத்திலே பிளவு மூட்டும் ஜாதி
உற்றார் உறவினரை துண்டிக்கும் ஜாதி
உலகைப் பிரிக்கும் ஜாதி!"

என்று கூறிவிட்டு,

"ஜாதிச் சனியனும் இந்து தர்மமே! உன்னால் எவ்வளவு அறிவு, ஆற்றல், அன்பு தூளாகிவிட்டது தெரியுமா! இந்தக் கொடுமை நிறைந்த ஜாதியால் எத்தனை எத்தனை பெருமக்கள், எத்தனை எத்தனை குஞ்சன்கள் எத்தனை, எத்தனை தஞ்சன்கள் உனது கர்ப்பத்திலேயே அழிந்து விட்டனர் தெரியுமா, அன்னை கேரளமே!" என்று வருந்திக் கண்ணீர் விடுகிறார்.

இந்த சமுதாயக் கொடுமைகள் வெகுநாள் நீடிக்காது. அக்கிரமம் அழிந்தே தீரும். அந்த நாள் விரைவில் வரும் என்பதை மனத்தில்கொண்டு கவிஞர் சனுதனிகளை கீழ்க் கண்டவாறு எச்சரிக்கிறார்.

"காலம் மாறுகிறது;
பழமைப் பிடிக்கயிறு இற்றுவிட்டது
இற்றுவிட்ட கயிற்றினால் மாந்தரை
நெடுநாள் கட்டி வைக்க முடியாது
உங்கள் எண்ணங்களை மாற்றிக்கொள்ளுங்கள்.
இல்லா விட்டால்,
புதிய பாதை ஊர்களையே மாற்றியே தீரும்!
கேரளம் முழுதும் இந்த புதிய சேதி
புயலென இடியென, எதிரொலிக்கிறது
காலமும் இதைத்தான் கணீர் கணீர் என ஒலிக்கிறது.
கக்கப்போகும் எரிமலையின் குமுறலின் ஒலி
உங்கள் காலடியிலே கேட்கவில்லையா?"

இப்படிப்பட்ட வெடிகுண்டுகள் அவரது பாடல் களிலே பரிணமித்தன. "உதிர்ந்த மலர்கள்" வீணபூவு (Veena Poovu) என்ற கவிதைதான், அவர் புக ழேணிக்கு ஏற உதவிய இலக்கிய பெட்டகம். "நளினி" என்ற இலக்கியம் மேலும் அவரது கீர்த்தியைப் பெருக் கியது. "கிராம மரத்துக் குயில்" (The Lark of the Village Tree) என்ற பாடலிலே அவரது எதிரிகளுக் குப் பதிலளிக்கிருர். 1924-ம் ஆண்டிலே ஓர் படகுப் பயணத்தின்போது கவிழ்ந்த படகால் மாண்டார், குமரன் ஆசான். ஆங்கில நாட்டுப் புரட்சிக் கவிஞர் ஷெல்லிக்கும், கவிழ்ந்த படகாலேயே முடிவு ஏற்பட் டது. கேரளத்தின் ஷெல்லிக்கும் அதேகதி. ஆனல் குமரன் ஆசான் பெயர் முகிலைக் கிழித்த முழுமதிபோல மலையாளத்திலே சுடர்விட்டே தீரும். தமிழகத்திலே சமுதாயப் புரட்சி வேலையிலே அங்கம் வகுக்கப்போகும் கேரளத்தில், இப்படிப்பட்ட கருத்துக்கினிய கீதம் நம்மையறியாமல், நம் தொடர்பில்லாமல் வளர்ந்திருக் கிறது என்று உணருகிற வேளையில், நமது இதயம் பூரிப் பால் பொங்குகிறது. நாம் காண விரும்பும் புதிய சமு தாயம் கேரளத்திலும் உருவாகித் தீரும், அதற்கு வேண் டிய பண்பட்ட நிலம் இருக்கிறது. பணி—பகுத்தறிவுப் பாசறைக்கு வெற்றியைச் சேர்க்கும் அதில் சந்தேக மில்லை. "கேரள கீதம்" அந்த ரகசியத்தைத்தான் நமது காதருகே வந்து சொல்கிறது.



# ஒரே நிலவு

க்ஷணநேர ஒலி! கைதட்டல்!
கேலிச் சிரிப்பு, கிண்டல், கண்டனம்
மங்கைகள் ஊளை, மடையர்தம் தீர்ப்பு
மனதை வளைக்கா 'மன்னன்' அவன்.
இதயங்கள் குவிக்கும் எழுச்சி வாழ்த்து
இறக்காத புகழ், எட்டாத செல்வாக்கு
மக்களின் மறையாத அன்பு,
இதுவே அவனுக்கு, மணிமுடி!
கவிதைக்குக் காசு, நினைப்புக்குப் பரிசு.
வெற்றிக்கு விருது, புகழ்ப் படையல்
'கூலிக்குப் பாட்டு—ஆகட்டும் தா' என்ற
அரசின் ஆணை; அவனுக்கோர் தூசு!
எண்ணம் துடிக்கும்—அவன் இதயம் பாடும்!
கனவுகள் வெடிக்கும் கவிதைகள் மலரும்.
கண்ணீர் வடிக்கும் சொல்நீர் சுரக்கும்.
துந்துபி கிளம்பும்! துயரங்கள் நீங்கும்!
தொல்லை! ஏழ்மை! இல்லாமை!
எல்லாம் ஒழிய, எழுப்புவான் கீதம்.

—புஷ்கின்

* * *

கவிஞன் ஓர் காலக் கண்ணாடி —
பழமைச் சாயலின் பிரதிபலிப்பல்ல!
உள்ளத்தில் ஆவேசம், உணர்ச்சியில் 'புயல்'
எழுப்பிடும் அவனது இதயம் கீதம்!

எதுகை, மோனை, எழில்தரும் உவமை,
வசீகர வர்ணனை — பழமைக்கு மெருகு
இத்தனையும் தேடி, எங்கெங்கோ ஓடி
'வார்த்தை முடையும்' வலைஞன் அல்ல!

—வால்ட் விட்மின்

*　　*　　*

உயர்ந்த உள்ளங்களின் உன்னத நேரங்கள்
வடித்துக் காட்டும் வரலாற்றுத் துளிகள்
அவையே கவிதை. அதுவே வாழ்வின் நூல்!

—ஷெல்லி

*　　*　　*

உன்னத எண்ணம், உயர்ந்த உணர்ச்சி
எழுப்பிக் காட்டும் இனிய சங்கீதம்,
அதுவே கவிதை.

—வால்டேர்

*　　*　　*

ரஷ்ய நாட்டு புஷ்கினும், பிரஞ்சு நாட்டு வால்டேரும், ஆங்கில நாட்டு ஷெல்லியும்,, அமெரிக்க நாட்டு விட்மனும் 'கவிஞன் யார்? கவிதையின் இலட்சணம் எது?' என்பது பற்றி உரைத்திருக்கும் விளக்கம்தான் தலைப்பிலே தீட்டப்பட்டுள்ளவை. இவர்கள் கூறுவது தானு முடிவாக அமைய முடியும் என்று யாருக்கும் கேட்கத்தோன்றும். ஆனல், இவர்களைவிட இதுபற்றிக் கூற யாருக்கும் உரிமை இருக்கிறது என்று கூறிவிட முடியாது. காரணம் அந்தந்த நாட்டு இலக்கிய வரலாற்றிலே இவர்களே ஒப்பற்ற கவிஞர்கள் என்ற உன்னத இடத்தை உலகம் ஒப்புக்கொண்டு நெடுநாளாகி விட்டது. ஆனல், இவர்கள் அத்தனைபேரும் ஒரு புதிய சகாப்தத்தின் தூதுவர்கள். அந்த மொழியிலே மறுமலர்ச்சி விதையைத் தூவிய உழவர்கள். இவர்கள் உதயமாவதற்கு முன்பெல்லாம் கவிஞன் என்ருல்

ஆண்டவன் அருள் பெற்றவன், ஆலயத்தின் பெருமை குறித்து, அற்புதங்களின் மகிமை குறித்து பாட வேண்டியவன். அரசர்கள் ஆற்றல் குறித்து, அவர்களின் அழகு ராணிகளின் அலங்கார வேலைகள் குறித்து பாக்கள் புனைபவன் என்ற நிலைமைதான் இருந்து வந்தது. நம்முடைய நாட்டைப்பொறுத்த வரையிலே நேற்று வரையில் கவிகள் என்றால் கடவுள் கடாட்சம் வேண்டும் கான சரஸ்வதியின் கிருபை வேண்டும் என்று தான் கருதப்பட்டு வந்தது. கவிஞர்கள் என்போரும் அரி அவதார மகிமை பற்றியும், அந்தலோக வாழ்வின் அருமை பற்றியும், இறைவனைப் பஜிக்கவேண்டிய இன்றியமையாமை குறித்துமே சொல்லோவியம்புனைந்து வந்தனர். காவியம் என்றால் ஒன்று மகேஸ்வரனைப் பற்றியதாய் இருக்கும், அல்லது மாளிகை வாசிகள் மனோஹரிகளுடன் கொஞ்சி விளையாடும் மந்தகாச வாழ்வைப் பற்றியதாய் இருக்கும். இதைத் தவிர மக்களைப்பற்றியவை எதுவுமே எழுந்ததில்லை. ஆனால் அந்த துர்ப்பாக்கிய நிலைக்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது. நம்முடைய தலைமுறையிலே தமிழகம் ஒப்பற்ற ஒரு கவிஞனை உருவாக்கியிருக்கிறது. தமிழ் மொழியிலே இப்படிப்பட்ட ஈடு இணையற்ற கவிஞரைக் கண்டதில்லை என்று நாடு இன்று இறுமாப்பு அடைகிறது. அவரது கவிதையிலே தமிழ்கொஞ்சி விளையாடுகிறது. அங்கே தென்றல் இருக்கிறது. புயல் இருக்கிறது. நெருப்பு இருக்கிறது. குளுமையான நிழல் இருக்கிறது. புன்னகை, கண்ணீர், பெருமூச்சு, அழுகுரல், புலம்பல், வீரமொழி, மழலை அத்தனையும்பின்னிக் கிடக்கின்றன, தமிழ் மக்களின் உள்ளத்தின் உன்னதப் படப்பிடிப்பு அங்கே தெரிகிறது. அவர்கள் மனத்திலே என்னென்ன போராட்டங்கள் சீறிக்கொண்டிருக்கின்றனவோ அவைகளைக் கவிதையிலே பிழிந்தெடுக்கப்பட்டிருப்பதைக் காண்கிறார்கள். அவர்கள் வீழ்ச்சியுற்ற வாழ்வுற்கு விசையளிக்க வந்த விருந்து என எண்ணுகிறார்கள்.

அந்த கவிதைகளிலே பழமைக்குப் பல்லவியில்லை. பழம் புலவர்களின் பாட்டுக்கு தாளமாகவில்லை. இலக்கணப் புத்தகத்திற்கு அடகு வைக்கப்பட்டதாகவுமில்லை. இன எழுச்சிக்கு ஊக்கம் ஊட்டுவதாய், இதய கீதத்தை இலக்கியவட்டிலிலே வடித்துவைத்திருப்பதாய் மனதார உணருகின்றனர், அவரது கவிதை நாட்டின் கேட்டினையும், கேடு களையப்பட வேண்டிய அவசியத்தையும் எடுத்து உரைக்கிறது. எதிர்காலத்திற்கு முன்னறிவிப்பு விடுகிறது. மக்கள் வாழ்விலே புதியதோர் எழுச்சி தென்படுகிறது. அந்த நிலைக்குக் காரணமான கவிஞனை, கவிஞன் வாழ்க! என்று தமிழகம் வாழ்த்துகிறது. வரவேற்புக் கூறுகிறது. அந்தப் பெருமையை தட்டிப் பறித்தவர்தான் கவிஞர் பாரதிதாசன்.

கவிஞர் பாரதிதாசனின் பெருமையை உணர அவர் வாழும் தமிழகத்தின் படப்பிடிப்பு மிகமிகத் தேவை. சூழ்நிலைதான் கவிஞனை உருவாக்குகிறது. "சூழ்நிலைக்கு அடிமையாகி விட்டாரா, சூழ்நிலையிலிருந்து எதிர்காலத்திற்கு பாதையைக் காட்டினரா?" என்பதுதான் கேள்வி.

அவர் வாழும் தமிழகம் இதோ! தமிழுக்கு இங்கு ஏற்றம் கிடையாது. இழிநிலையிலே இருக்கவேண்டிய ஒன்று வேண்டாத சாதி நெருப்பு, விடியாத விதவைத் தொல்லை, கொடிய குழந்தைமணம், காதல் கொழிக்காத திருமணம், கஞ்சிக்கில்லாத ஏழை எளியவர், கல் நெஞ்சக் கடவுள் தரகர், பாட்டாளியை வாட்டும், பணக்காரன். இவை அத்தனையும் வேண்டிய மட்டும் இருக்கிறது. இந்தக் காட்சிகள் கவிஞரின் மனத்தைக் குலுக்குகிறது. "என்னருமைத் தமிழ்நாடே! இழிநிலையுற்றனையே" என்று ஏங்குகிறது அவர் இதயம்.

தமிழ் மொழியின் இனிமையை நினைத்துக் கொள்கிறார் அதுபடும் இடர்ப்பாடும் அவருக்குத் தெரிகிறது

வஞ்சகர்களால் வந்த வடமொழி அதன்மீது வம்புபுரி கிறது. ஆங்கிலத்தின் அட்டகாசம் தமிழின் ஒளியை அணைக்க முயலுகிறது எங்கிருந்தோ வந்த இந்தி அரச பீடமேற துடித்து நிற்கிறது. எத்தனை கணைகளைத்தான் தமிழன்னை தாங்கிக்கொள்வாள்? எனவேதான் இந்திக்கு ஏற்றத்தையும் தமிழ் சரிகிற தன்மையையும் வைத்துக் கொண்டு கேட்கிறார்;

"மணக்கவரும் தென்றலிலே குளிரா இல்லை
தோப்பில் நிழலா இல்லை
தணிப்பரிதாகத் துன்பமிது
தமிழகத்தின் தமிழத் தெருவில்
தமிழ்தானில்லை."

இவை வெறும் சொற்பின்னலல்ல, நாட்டின் நிலையைக் கூறும் உணர்ச்சிச் சித்திரம். தென்றலிலே குளிர் இல்லாமல் இருக்கமுடியாது. தோப்பிலே நிழல் இல்லாமல் இருக்கமுடியாது. ஆனால் தமிழ்நாட்டில் தமிழ்த் தெருக்களில் தமிழ்ப்பெயர்கள் இல்லை. எவ்வளவு விசித்திரமான வேதனை! எனவேதான் "செந்தமிழுக்குத் தீமை வந்தபின்னும் இந்தத் தேகம் இருந்தொரு இலாப முண்டோ? எப்பக்கம் வந்து புகுந்துவிடும்! இந்தி எத்தனை பட்டாளம் கூட்டிவரும்? பங்கம் விளைந்திடில் தாய்மொழிக்கே உடல் பச்சைரத்தம் பரிமாறிடுவோம் தீங்குள்ள இந்தியை நாம் எதிர்ப்போம் உயிர் தித்திப்பை எண்ணிடப்போவதில்லை, மாங்குயில் கூவிடும் பூஞ்சோலை எம்மை மாட்ட நினைக்கும் சிறைச்சாலை!" என்று எரிமலையின் அனற்பிழம்பு போன்று கூற முடிகிறது. தமிழின் சிறப்புபற்றி, தமிழைக் காப்பாற்ற வேண்டிய கடமை குறித்து வேறு எந்தக் கவிஞனும் இவரளவு பாடல்கள் தீட்டியதில்லை; தீட்டவும் முடியாது. அவ்வளவு திகட்டாத அன்பு தமிழின்மேல் அவருக்கு.

சமதர்ம சகாப்தத்தின் தலைசிறந்த கவிஞன் என்று புகழப்பட்ட மாயக்காவ்ஸ்கி சொன்னான்: "வாழ்நாள் முழுதும் நான் பாடுபட்டது அழகிய பாடல்களை ஆக்கி,

கேட்பவர் காதுகளில் செஞ்சொற் தேனைச் சொரிந்து நெஞ்சை யள்ளுவதற்காக அல்ல. சிலரை, சில ஏற்பாடு களைத் தலைகுப்புறக்கவிழ்ப்பதே எனது போராட்டம். எனது இருபது வருட இயக்கப் பணியிலே உண்மையாக நான் சண்டையே நடத்திவந்திருக்கிறேன்'' என்ற மாயகாவ் ஸ்கியின் மணிமொழிகள் பாரதிதாசனைப் பொறுத்த வரையிலே மிகமிக உண்மை. இவரது இலக்கியசேவை குத்துச்சண்டையாக இருந்திருக்கிறது. ஆரம்பக் காலங் களிலே புலவர் பெருமக்கள் என்பவர்கள் இவரை கவிஞர் பட்டியலிலே சேர்த்துக்கொள்ளவில்லை. ஏளன மும், கேலியும் கிண்டலும் பரிசாகக் கிடைத்தன. வங்கத் தின் தங்கம் என்று போற்றப்படும் கவி தாகூர் பாடல்கள் புனைந்தபோது வங்கமொழிப் பண்டிதர்கள், தங்கள் மாணவர்களுக்கு அவைகளை எடுத்துக்கொடுத்து இலக் கணப் பிழைகளைத் திருத்தச்சொல்வார்கள்! அதுபோன்ற தொரு நிலையே இங்கும் நீடித்தது. அவர் கவிதைகளிலே செஞ்சொல் தேன் இருந்தது. ஆனால் நெஞ்சையள்ளுவது தான் அவைகளின் நோக்கம் என்று நினைக்கவில்லை. சிலரை, சில ஏற்பாடுகளைத் தலைகுப்புறக் கவிழ்ப்பது தான் அவரது போராட்டம் எனக்கருதினார். எனவேதான் விதவைக் கொடுமையைக் கண்டபோது "வாடாத பூப் போன்ற மங்கை நல்லாள் மணவாளன் இறந்தால் பின் மணத்தல் தீதோ, பாடாத தேனீக்கள், உலவாத தென்றல், பசியாத நல்வயிறு பார்த்ததுண்டோ'' என்று கேட்டார். காதல் மணத்தைக் கடிந்தோரை "காதலரிரு வரும் தம் கருத்தொருமித்தபின் வாதுகள், வம்புகள் ஏன்? இதில் மற்றவர்க்கென்ன உண்டு—சூது நிறை யுலகே – கபட இருட்டறையே'' என்று கோப மொழி களை வீசினார். குழந்தை மணத்தின் கொடுமை குறித்து "அவள்தான் கூவத்தெரியாத குயிலின் குஞ்சு, தாவாச் சிறுமான், மோவா அரும்பு, தாலியறுத்துத் தந்தையின் வீட்டில் இந்தச் சிறுமி இருந்திருக்கிறாள்'' என்று பச்சா தாபத்துடன் வரைந்தார். ஜாதிக்கொடுமை குறித்து "வாழ்கின்றார் முப்பத்துமுக்கோடி மக்களெனில் சூழ்

கின்றபேதமும் அந்தத் தொகை இருக்கும். இந்த உளைச் சேற்றை, எருத ஆழத்தை நீக்குவது எப்படி?'' என்று வினவுகிருர். இந்தக் கவிதைகள் சமுதாயச் சழக்கர் களுக்குச் சவுக்கடி மட்டுமல்ல! அந்தக் கொடுமைகள் தூர்க்கப்படவேண்டும் என்பதற்கோர் கருவியுமாயிற்று. இந்தச் சமுதாய ஏற்பாடுகளைத் தலைகுப்புறக் கவிழ்ப்ப தற்கு அவை பெருந்தொண்டு செய்தன என்று சொல் லலாம்.

இக்பால் இஸ்லாமிய கலாச்சாரத்தின் பாதுகாவலர் என்ருல் பாரதிதாசன் திராவிடக் கலாச்சாரத்தின் பாது காவலர் என்று சொல்லலாம் கவி தாகூரின் இயற்கை வருணனைகளை மிஞ்சியவை கவிஞரின் 'அழகின் சிரிப்பு' என்று அவனி ஓர்நாள் ஒத்துக்கொள்ளத்தான் போகிறது. ஷெல்லி ஆதிக்க புரியினர்மீது தனது கவிதா சக்தியை ஏவினர். இதிலே அவரையும் மிஞ்சிவிட்டவர் பாரதி தாசன் என்றுதான் அவரது கவிதைகள் கூறுகின்றன. வால்ட் விட்மன் பழமை பாசிபடர்ந்த கொள்கைகளை அகற்றி புது சமுதாயம் உருவாக மெருகிட்டார். நமது கவிஞரின் பாடல்கள் பழமைக்குப் படுகுழி வெட்டி, புதுவாழ்வுக்கு வவேற்பளிக்கும் துந்துபியாய் முழங்கு கின்றன. ஏழை எளியவர்கள் உழைக்கிருர்கள். அவர் களின் உழைப்பை உறிஞ்சி உல்லாச புரியினர் உண்டு கொழுக்கின்றனர் என்பதைக் கூறவந்த ஷெல்லி பின் வருமாறு கூறினர். ''மக்களே உங்களைத் தாழ்மைப்படுத் தும் தனவந்தருக்கு நீங்கள் உழுது பயிரிடுவதேன்? உங் களை உதாசினப்படுத்துபவனுக்கு உயர்ந்த உடைகளைக் கொடுப்பதேன்? உங்கள் வியர்வை வடித்து, உங்கள் குருதியைக் குடித்து உங்களைத் துன்புறுத்தும் அந்த நன்றியற்ற தேனீக்களுக்கு பிறப்பு முதல் இறப்பு வரை உணவும் உடையும் தந்து காப்பதேன்? உங்களுக்கு நல் லுணவு, உடை, ஓய்வு—ஒதுங்க இடம், சுகம், சமா தானம் உண்டா! நீங்கள் விதைக்கிறீர்கள்— அயலான் அறுக்கிருன், நீங்கள் நெய்கிறீர்கள்—அயலான் அணிகி

ருன். நீங்கள் ஆயுதம் செய்கிறீர்கள்—அயலான் உங்கள் மீதே உபயோகிக்கிருன்.'' இதே கருத்தைக் கூறவந்த கவிஞர் இக்பால் "தொழிலாளியின் இரத்தத்தால் முதலாளி போகமனுபவிக்கிருன். உழவரின் வாழ்நாளைப் பாழாக்கி மிராசுதாரன் இன்பமாக இருக்கின்ருன். உழைப்பவனை நுகத்தடியில் மாட்டி அரசன் ஆனந்தமடைகின்ருன். அட்டூழியத்தில் சிக்கிய மக்களோ உணர்கின்றனர். பலவீனர்கள் தேகத்திலும் சிலசமயம் சிம்மத்தின் இரத்தம் ஓடும். நீர்த்துளியிலும் நெருப்பின் உணர்ச்சி தோன்றுவதுண்டு'' என்று கூறினர். இதைக் கூறவந்த பாரதிதாசன்

"காடு களைந்தோம்—நல்ல
கழனி திருத்தியும் உழவு புரிந்தும்
நாடுகள் செய்தோம்—அங்கு
நாற்றிசை வீதிகள் தோற்றவும் செய்தோம்.
ஆடைகள் நெய்தோம்—பெரும்
ஆற்றை வளைத்துநெல் நாற்றுகள் நட்டோம்
வாழ்வுக் கொவ்வாத—இந்த
வையத்தை இந்நிலை எய்தப் புரிந்தோம்
கந்தையணிந்தோம்—இரு
கையை விரித்தெங்கள் மெய்யினைப் போர்த்தோம்.
மொந்தையிற் கூழைப்—பலர்
மொய்த்துக் குடித்துப் பசித்துக் கிடந்தோம்
சந்தையில் மாடாய்—யாம்
சந்ததம் தங்கிட வீடுமில்லாமல்
சிந்தை மெலிந்தோம்—எங்கள்
சேவைக் கெலாம்இது செய்நன்றி தானே?''

என்று கேட்கிருர். மேலே குறிப்பிட்டுள்ள மூன்று பகுதிகளை ஒப்பிட்டுப் பார்த்தால் பாரதிதாசனின் பாடல் களின் கருத்துச் செறிவுக்கும் பொருள் நுட்பத்திற்கும் அத்தாட்சியாய் அமையும்.

பழைய இலக்கியம் என்பவை வைதீகத்திற்கு வாழ்த்துக்கூறி வரட்டு வேதாந்தத்தை புகுத்துவதாகவே முடிந்தது. தமிழர்களின் உள்ளத்திலே விஷவிருட்சம் இருப்பதற்குக் காரணம் இதுதான். கவிதைகள் வாழ்க் கைக்கு தோழனுக அமையவில்லை. கவிஞரின் "குடும்ப விளக்கு"ம் "இருண்ட வீடும்" வாழ்க்கைக்கு இலக் கணம் உரைப்பவை. புது வாழ்வு அரும்புவதற்கு உபயோகமாகும் கருவூலப் பெட்டகங்கள். கவிஞரின் இலக்கியங்கள் பிரச்சார நோக்கங்கொண்டவை என்று குறைகூறும் கூட்டம் ஒன்று இருக்கிறது. இது இங்கு மட்டும்தான் என்று இல்லை. எல்லா நாடுகளிலுமே இப்படிப்பட்டவர்கள் இருந்திருக்கிருர்கள். ஆங்கில நாடக இலக்கியத்திலே தலை சிறந்த காலஞ்சென்ற பேரறிஞர் பெர்னுட்ஷாவின் நாடகங்கள் பிரச்சார நோக் கங்கொண்டவை. அவை வெறும் சம்பாஷணைகள் (Conversations) சரித்திரப் பாடங்கள் (History Lessons) என்று குற்றஞ் சாட்டப்பட்டது. அதற்கு பெர்னுட்ஷா பதிலிறுத்தாராம்: "நான் சமுதாயத்திற் குச் சில கொள்கைகளைக் கூறவேண்டும். அந்தக் கொள் கைகளைச் சொல்ல எனக்கு நாடகம் வசதியாக இருக் கிறது. அதனுல்தான் எழுதுகிறேன். என்னுடைய நோக்கம் பிரச்சாரம்தான்" என்ருராம். ஆனுல் பெர் னுட்ஷாவின் நாடகங்கள் உயரிய இலக்கியம் என்ற பெயரைத்தான் பெற்றன. எனவே "பிரச்சாரம், பிரச் சாரம்" என்பதெல்லாம் முயற்சியை உருக்குலையச் செய்யும் சூழ்ச்சி தவிர வேறில்லை.

பாரதிதாசன் தமிழ் வானத்தின் ஒரே நிலவு. அவர் திராவிடத்தின் சொத்து. அவர் கவிதைகள், தேன் சொட்டும் சாவாக்கனி! "அவர் வாழ்க! அவரது புகழ் உலகெங்கும் பரவுக!" என்று தமிழகம், இன்று தனது இதய வாழ்த்துக்களைச் சேர்ப்பிக்கிறது. தமிழகத்தின் மகிழ்ச்சித் திருவிழா கண்டு மனம் பூரிக்கும் நாமும் நமது இதய வாழ்த்துக்களை அவருக்கு அர்ப்பணிக்கிறோம்.

வாழ்க! வாழ்க நம் கவிஞர்!!



# மேக மண்டலந் தாண்டி

'பறப்பதா? வான வெளியிலே மனிதன் பறப்பது— சுத்த பகற் கனவு'

'அபத்தமான கற்பனை. அமானுஷ்ய காரியம்'

'பித்த மதியினரின் சத்தற்ற பிதற்றல்'

'விவேகமற்றவரின் வெற்றுரை. காற்றைவிட கனமான இயந்திரத்தில் மனிதனாவது பறப்பதாவது, முடியாத காரியம்; பறக்க முயற்சிப்பதே 'நான்சென்ஸ்' —'முட்டாள்தனம்'

இப்படிப்பட்ட உரையாடல் 'புண்ணிய பூமியாம்' நமது மண்ணிலே நடைபெற்றது என்றால் "இதிலென்ன அதிசயம்! நமது உரிமைச் சரக்காயிற்றே இந்த உதவாக் கரை வேதாந்தம். விண்ணிலே பறக்கும் விமானத்தைக் கண்ட பிறகும் அப்படிப் பேசும் இடங்களைக் காட்டட் டுமா?" என்றே எவரும் கூறுவர். 'பாருக்குள்ளே எங்கள் நாடு நல்ல பகுத்தறிவு ஓங்கும் நாடு' என்று புகழப்படும் அமெரிக்க நாட்டில் மேலே தீட்டியுள்ள உரையாடல்—உரையாடல்கூட அல்ல, கட்டுரை—எப் போதோ பதினேழாம் நூற்றாண்டிலே அல்ல — இப் போது இருபதாம் நூற்றாண்டின் துவக்கத்திலே 1903-ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் 22-ம் நாள் 'சுதந்திரன்' என்ற இதழிலே வெளியாகியது. தீட்டியவர் சாமான்யரு மல்ல. சகல கலா வல்லவர். சர்வதேச பண்டிதர், வானசாஸ்திரி பெஞ்சமின் பிராங்கிலினுக்குப் பின்னாலே பிரஞ்சு நாட்டு 'அறிஞர் அவையிலே உறுப்பினராகும்

அந்தஸ்து பெற்ற ஒரே அமெரிக்கர். சைமன் நியூ கோம்ப் (Simon New Combe) எனும் பெயருடையர். "பறக்க முயற்சிப்பது 'நான்சென்ஸ்,' பறக்கிருன் என்றே வைத்துக்கொள்வோம். எங்கே அவன் நிற்பது? அந்த வேகத்தில் நின்ருல் பிணமாக கீழே விழவேண்டியதுதான்" என்ற ஆருடம் கணித்த நியூ கோம்ப் கட்டுரை அச்சாகிக்கொண்டிருந்த நேரத்தில், அதே அமெரிக்காவில் மனித சஞ்சாரம் அதிகமில்லாத ஓர் கடற்கரையின் வெண்மணற் பரப்பிலே இந்த 'நான்சென்ஸ்' வேலையிலே ஈடுபட்டிருந்தார்கள் இரு வாலிபர்கள். ஒருவன் அண்ணன், மற்றவன் தம்பி—இரு சகோதரர்கள். தாங்கள் தயாரித்த ஆகாய விமானத்தின் அங்கங்களைப் பூட்டிக்கொண்டிருந்தார்கள் வான வீதியில் பவனி விடுவதற்காக.

* * *

1903-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 14-ம் நாள். அமெரிக்காவில் வட கரோலிஞவைச் சேர்ந்த கிட்டி ஹாக் (Kity Hawk) கடற்கரை மணல்வெளி. தாங்கள் தயாரித்த ஆகாய விமானத்தை 'கூடாரத்திலேயிருந்து வெளியே எடுத்து வைக்கிருர்கள் அந்த வாலிபர்கள். ஒருவன் பெயர் (Wilbur Wright) மற்றவன் பெயர் ஆர்வில் ரைட் (Orville Wright) ஓகியாவிலுள்ள டெய்டன் (Dayton) என்ற இடத்தைச் சார்ந்தவர்கள். அந்த நாள் அவர்களுக்கு 'வாழ்விலோர் திருநாள்.' பத்து ஆண்டு பட்ட பாட்டின் பலனைக் காணும் பரவசம் அவர்கள் முகத்திலே கூத்தாடுகிறது. 'எத்தனை இரவுகள் கண் விழித்தோம், எத்தனை பகல் உணவை மறந்தோம். மூளையை எவ்வளவு குழப்பிக்கொண்டோம், எவ்வளவு ஆயாசம், அலுப்பு, அயர்வு குறுக்கிட்டது. அவற்றிற்கு அடிமைப் பட்டிருந்தால் இந்த ஆனந்த அறுவடையைக் காணமுடியுமா!' என்ற பெருமூச்சு காற்ருேடு கலக்கிறது. மனிதகுல வரலாற்றிலே முதன் முதலாக விண்ணிலே பறக்கும் மாண்பு மிக்கதோர் பெருமை தங்களுக்

குக் கிட்டியதாகக் கருதுகின்றனர். அதிலே ஓர் சிக்கல் கிளம்புகிறது. ஒரே நேரத்தில் ஒருவன்தான் விமானத்தில் பறக்க முடியும். யாருக்கு அந்தச் சிறப்பு சேர்வது? அவர்களைப் பொறுத்தவரையில் யாருக்குச் சேர்ந்தாலும் ஒன்றுதான். ஓர் வேடிக்கை நடக்கிறது. யார் விமா விமானத்தை ஓட்டுவது—வில்பரா? ஆர்விலா? இம்மாதிரி நிலைமைகளில் ஓர் நாணயத்தை எடுத்து 'பூவா தலையா' என்று நாம் பார்ப்பதில்லையா, அதே போல் செய்கின்றனர். வில்பருக்கு அந்த 'வாய்ப்பு' கிடைக்கிறது. வில்பர் விமானத்தில் அமர்ந்தான். என்ஜினை முடுக்கிய வேகத்தில் எழுந்த சப்தத்தைக் கண்டு வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்த இரு சிறுவர்களும், ஒரு நாயும் தலைதெறிக்க ஓடினர்.

நாற்பது, நாற்பத்தைந்து அடி தரையிலே சென்று சிலஅடிகள் உயர எழுந்து 100 அடிதள்ளி கீழே விழுந்தது. மொத்தம் நான்கு செகண்டுகள் தான் விமானம் வானிலே இருந்தது. விழுந்த வேகத்தில் சில பாகங்கள் பழுதாயின.

17-ந்தேதி காலை வாடைக்காற்று விர்ரென்று வீசுகிறது. ஆர்வில் இப்போது விமானத்தை ஓட்டுகிறான்; 120 அடி பறக்கிறது. நாலுமுறை பறக்கிறான். கடைசி முறை 59 செகண்டுகளும் 852 அடி தூரமும் பறக்க முடிகிறது. ஆனால் காற்றின் கடுமையால் இயந்திரம் தாக்கப்பட்டு சுக்குநூறு நொறுங்கியது. ஆனால் அவர்கள் இதயத்திலே இருந்த இன்பக் கனவு சுக்குநூறாக வில்லை. வையகத்தின் வாழ்வையே மாற்றி புதிய சகாப்தம் ஒன்றை உருவாக்க இருந்த இந்த சம்பவத்தை எவரும் கவனிக்கவில்லை. பத்திரிக்கைகாரர்களோ கேலி மொழி பேசிக்கிடந்தனர். இவைகளையெல்லாம் கவனிக்க ரைட் சகோதரர்களுக்கு நேரமேது? நினைப்பேது? கிட்டிஹாக் சம்பவத்திற்குப் பிறகு தங்கள் சொந்த ஊர் திரும்பினர். புதிய விமானம் ஒன்று கட்டத் தொடங்கினர். புதிய ஆராய்ச்சி, புதிய கணக்கு இவைகளிலே

மூழ்குகின்றனர். ஓயாத சிந்தனையும், ஒழியாத செயலும் அவர்கள் நித்திய நிகழ்ச்சியாயின. ஆர்வம் மிகுதியால் தங்கள் ஆற்றலை நம்பி சக்திக்கு மீறிய முயற்சியில் ஈடு பட்டிருந்தனர். அமெரிக்காதான் ஐஸ்வரிய நாடே தவிர அவர்கள் ஒன்றும் ஆலையரசர்களின் திருமனை களிலே பிறந்தவர்களல்ல. வறுமைத் தேளாலே கொட் டப்பட்டவர்கள். வயிற்றுப் பிழைப்பிற்கு — வாழ்க்கை நடத்துவதற்கே தொழிலிலே ஈடுபட்டுத் தீரவேண்டிய நிர்ப்பந்தத்திலே உள்ளவர்கள்.

சைக்கிள் சாமான்கள் செய்து அவை தரும் ஊதி யத்திலே குடும்பம் நடத்த வேண்டியவர்களுக்கு வானூர்தி கண்டுபிடிக்கும் வசதி வேண்டுமென்றால் வம்புதானே? எனினும் அந்த வம்பிலே ஈடுபட்டனர் வைர நெஞ்சம் படைத்த அந்த வாலிபர்கள். சொந்த ஊரான டெய்னுக்கு 8 மைல் தொலைவில் 68 ஏக்கர் பரப்புள்ள ஓர் பசும் புற்றரையைத் தேர்ந்தெடுத்தனர். கிட்டி ஹாக் கடற்கரையிலே தொடர்ந்து பரிசோதனை நடத்த செலவு என்ன ஆவது? அவர்கள் என்ன ஜமீனா? மிட்டாவா? மிராசா? அந்தப் பசும் புற்றரை அவ்வளவு வசதியுள்ளதாக இல்லை. வானுயர ஓங்கி வளர்ந்த மரங் கள் ஓர்புறம் மின்சாரக் கம்பங்கள் மற்றோர் புறம். மேடுபள்ளங்கள் வேறு. காற்றோ கடும் வேகம் கிடையாது. என்ன செய்வது? இருந்தாலும் அந்தப் பசும்புற்றரையில் அவர்கள் பரிசோ தனை துவங்கியது. ஐம்பத்தோருமுறை பறந்தனர் துளி யும் முன்னேறவில்லை. எனினும் துவண்டாரில்லை. துணிவு அவர்களை வெற்றிக்குத் துரத்தியது. 1904-ம் ஆண்டு ஐந்து நிமிடங்கள் பறக்கிற அளவு முன்னேறி னர் அந்த ஆண்டு முழுதும் 45 நிமிடங்கள்தான் வானத் தில் பறந்தனர்: அந்த முக்கால்மணி நேரத்தில் அவர்கள் பெற்ற படிப்பினை விலை மதிக்க முடியாதது 1905-ஆம் ஆண்டில் 38 நிமிடத்தில் $24\frac{1}{2}$ மைல் பறக்கும் அள விற்கு வெற்றி கண்டனர்.

ஹாப்மன் பசும் புற்றரை மைதானத்தில், இரண்டு நெடுஞ்சாலைகளுக்கும் ஒரு ரயில் பாதைக்கும் மேலே நீல வானிலே ஏறக்குறைய இரண்டாண்டுகளுக்கு மேலாக ஓர் விமானம் வட்டமிட்டுக் கொண்டிருந்தது. பொதுமக்கள் எவரின் கண்ணையும் கருத்தையும் கவரவேயில்லை. இந்தப் புதிரைப் புரிந்துகொள்ளும் அக்கறை ஒருவர்பாலும் எழவில்லை. 1906-ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் 'அமெரிக்க விஞ்ஞானி' (Scientific American) என்ற இதழ் "ரைட் ஏரோப்பிளேனும் அதுபற்றிய கட்டுக்கதையும்" என்று மகுடமிட்டு எழுதிய கட்டுரையில் "அப்படிப்பட்ட பரபரப்பானதும், முக்கியத்துவம் பொருந்தியதும், எவரும் மிகுந்த அக்கறைகொண்டதுமான ஓர் பொருளைப்பற்றி, அமெரிக்காவின் குக்கிராமத்திலே அல்ல, சகலரும் அறிந்த ஒரு இடத்தில் பரிசோதனை நடத்தப்படுகிறதென்றால், சுறுசுறுப்பு நிறைந்த அமெரிக்க நிருபர்கள்—பதினைந்து அடுக்கு மாடியையும் ஏறி இறங்கத் தயங்காது, அதல பாதாளத்திலிருந்தாலும் சேதியை சேகரித்துவரும் அமெரிக்க பத்திரிகை நிருபர்கள் கண்ணுக்கும் கருத்துக்கும் தப்பிவிட்டிருக்க முடியுமா? பிரசுரிக்சாமல் இருந்திருப்பார்களா? யாராவது நம்புவார்களா? எல்லாம் கட்டுக்கதை" என வரைந்தது.

"பஞ்ச்" (Punch) என்ற கிண்டலுக்குப் பேர் போன பத்திரிகையில் நகைச்சுவை துண்டு ஒன்று வெளியானது. நண்பன் ஒருவன் மற்றவனைக் கேட்கிறான்.

"நண்பா! நீ எப்போது உனது முதல் பறக்கும் பயணத்தைத் துவங்கப்போகிறாய்?" மற்றவன் பதில் சொல்லுகிறான் "ஆகர்ஷண விதிகள் (Law of gravitation) ரத்தானவுடன்" நம்முடைய நாட்டிலே நல்ல காரியம் செய்யக் கிளம்பினால் அதை நையாண்டி செய்வதையே தொழிலாகக் கொண்டிருக்கவில்லையா சில பத்திரிகைகள், அமெரிக்காவோ, ஆங்கில நாடோ அதற்கு விதி விலக்கா என்ன? ரைட் சகோதரர்கள் முயற்சியை எவ்வளவு இழிவுபடுத்த வேண்டுமோ, அவ்வளவும்

செய்தார்கள், கதிரொளியைக் கருமேகம் நெடுநேரம் மறைக்க முடிவதில்லை. முகிலைக் கிழித்து முழுமதி வெளிவரத்தான் செய்கிறது. உண்மையை நெடுநாளைக்கு மூடி வைக்க முடிவதில்லை. ரைட் சகோதரர்களின் வியத்தகு சாதனைகள் ரூட் எனும் முதியவர் கவனத்தை ஈர்த்தது. அவர் ஓர் தேனீ ஆராய்ச்சியாளர். தமது பத்திரிகையிலே ரைட் சகோதரர்களைப்பற்றிய விவரத்தை வெளியிட்டு "அமெரிக்க விஞ்ஞானி" ஆசிரியருக்கு கோடிட்ட இதழும் ஓர் கடிதமும் அனுப்பினர். ரூட்டுக்கு மூளை குழம்பியிருக்கிறது என்று சிரித்துவிட்டு 'அமெரிக்க விஞ்ஞானி' ஆசிரியர் அந்த இதழை குப்பைத் தொட்டியிலே கிழித்தெறிந்தார்!

"நடக்கிற காரியமா? நியூகோம்பே 'நான்சென்ஸ்' என்றாரே. யாரோ ஊர் பேர் தெரியாத, சைக்கிள் சாமான் செய்யும் சிறுவர்கள், கல்லூரியில் மழைக்குக்கூட ஒதுங்காதவர்கள், அவ்வளவு பெரிய அற்புதத்தை சாதிப்பதாவது? நம்ப முடியவில்லை" இந்த பாணியிலேதான் பலரும் நினைத்தனர் நெடிய இரவிற்குப் பிறகு அருணோதயம் வந்தே தீருகிறது. வானத்திலே வட்டமிடும் விமானத்தை கண்ட பலரும் "இல்லாமலா பறக்கிறது?" என்று பேசலாயினர். கடைசியாக கிட்டிஹாக் சம்பவத்திற்கு மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு 15—12—1906 இதழில் "விஞ்ஞான கண்டுபிடிப்புகளின் வரலாற்றிலே, டெய்டனைச் சேர்ந்த ரைட் சகோதரர்களின் ஏரோப்பிளேன் இயந்திரத்திற்கு ஈடானதும் இணையானதும் வேறு இல்லை என்பதே நமது அபிப்பிராயமாகும்" என எந்த 'அமெரிக்க விஞ்ஞானி' அடிநாட்களிலே அலட்சியமும் அருவருப்பும் காட்டியதோ அதே 'அமெரிக்க விஞ்ஞானி' தலையங்கம் தீட்டியது.

தலையங்கம் கண்டு ரைட் சகோதரர்கள் கர்வமோ, பெரும் களிப்போ கொள்ளவில்லை. இப்போதாவது உலகம் உணர்கிறதே என்ற திருப்தி அவர்கள் மனத்திலே நிறைந்திருந்தது. பல நூற்றாண்டுகள் பெரும் விஞ்ஞான

வித்தகர்களை திக்குமுக்காடச் செய்த, திணறச்செய்த ஓர் பிரச்சனையிலே வெற்றிமாலை சூடினர். தன்னந்தனியாக, எவருடைய துணையுமின்றி முடியாதது என்று சொல்லப் பட்ட ஒற்றை, 'நான்சென்ஸ்' என்று நையாண்டி செய்யப்பட்ட செயலை நடத்திக் காட்டினர். அதற்காக வெற்றி முரசம் ஆர்ந்ததா? வாஷிங்டன் நகரசபை வரவேற்புப் பத்திரம் வாசித்தளித்ததா? வாகை சூடிய வாலிபர்களை நாடு வாழ்த்தியதா? இவை எதுவும் நடை பெறவில்லை. ஆனால் பொறாமைக்காரர்களின் பகைமைத் தீ கொழுந்துவிட்டு எரிய ஆரம்பித்தது.

"இந்த நல்ல காரியத்துக்குக் கூட பொறாமைய்யா, அந்த பொல்லாங்குக்கார புல்லர்கள் யார்? என்று கேட் கத் தோன்றும். அவர்கள் பழைமையின் அடிவருடி களல்ல புதுமை விரும்பிகள் தான். வாஷிங்டன் நகரத்தில் இருந்த ஸ்மித்சோனியன் கழகத்தைச் சேர்ந்த 'பெரியவர்கள்' தான் பகைமையை உமிழும் திருப்பணி யிலே ஈடுபட்டனர் காரணம் அவர்களும் ஆகாய விமா னத்தைக் கண்டு பிடிக்கும் ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந் தனர். அதற்காக அமெரிக்க அரசாங்கம் ஐம்பதினாயிரம் பவுன், வேறோர் அமைப்பு இருபதினாயிரம் பவுன் நிதி அளித்திருந்தது. லாங்கிலி என்ற விஞ்ஞானி தலைமை யிலே கழகம் நடத்திய ஆராய்ச்சிகள் நிதி கரைவதற்கு வாய்க்கால் வெட்டியதே தவிர வானூர்தி காண வழி அமைக்கவில்லை. அவர்கள் பறக்கவிட முயன்ற ஒவ் வொரு விமானமும் பக்கத்திலேயிருக்கிற பொடமாக் ஆற்றிலே தொப்பென்று விழுந்தது. அரசாங்கத்தின் 'கிருபா கடாட்சம்', ஆற்றல்மிக்கவர்கள் என்ற விருது, அமோக வசதிகள் அத்தனையும் இருந்தும் நம்மாலே முடியாததை இந்த சிறுவர்கள் — அன்னக்காவடிகள் கண்டுபிடிப்பதாமே என்று அறுவருப்பு அவர்கள் மனத்தைவிட்டு அகலவில்லை. அவனிக்கு வேண்டியது ஆகாய விமானம், அது யாரல் கிடைத்தால் என்ன என்று எண்ணும் பெருந்தன்மை, உயர்குணம் அவர்கள் பால்

குடிகொண்டிருக்கவில்லை. போட்டிக்காரர்கள் என்ற பொச்சரிப்பே தலைதூக்கி நின்றது. ரைட் சகோதரர்களுக்கு எதிராக பல புரட்டுகளை — புன்செயல்களைச் செய்தனர். இந்தப் பகைமை தூர்க்கப்படுவதற்கு நெடு நாட்கள் பிடித்தன.

தாயகத்தின் மீதுள்ள மாளாத அன்பால், அமெரிக்க சர்க்காருக்கு தாங்கள் கண்டுபிடித்த ஆகாய விமானத்தின் முழு உரிமைகளையும் இரகசிய முறைகளையும் உடமையாக்குவதாக யுத்த இலாகாவுக்குக் கடிதம் தீட்டினர். யுத்த இலாகா உவகையுடன் ஏற்றுக்கொண்டதா? அதுதான் இல்லை. எவனோ உன்மத்தனின் உளறல்மொழி என கருதி 'பழைய பைல்'களிலே கடிதத்தைக் கோர்த்து வைத்துக்கொண்டு இப்படிப்பட்ட கடிதம் ஒன்றைப்பற்றி மறந்தே போனார்கள். வேறு எந்த நாட்டு சர்க்காருக்காவது அவர்கள் விற்றிருக்க முடியும். இருகை கூப்பி வாங்கிக்கொள்ள பிரிட்டன் போன்ற நாடுகள் காத்துக்கிடந்தன. அந்த முயற்சியில் அவர்கள் ஈடுபடவில்லை.

'எதையும் தாங்கும் இதயமுண்டு' என்ற கருத்துக்கு இலக்கியமாய் அமைந்த அவர்கள் இழிவையும் பழியையும் தாங்கிக்கொண்டனர். யுத்த இலாகாவினரைத் திகைக்க வைப்பதற்காக ருசிகரமான திட்டம் ஒன்று தீட்டினர்.

இங்கிலீஷ் காலனி நிறுவப்பட்ட முன்னூறாவது ஆண்டுவிழா கொண்டாடுவதற்காக வர்ஜீனியா கடற்கரையில் ஹாம்டன் ரோடு என்ற இடத்தில் கடற்படை அணிவகுப்பு ஒன்று நடைபெறுவதாக இருந்தது. ஜனாதிபதி ரூஸ்வெல்ட்டும், ராணுவ தளகர்த்தர்களும் கடற்படைத் தலைவர் அணிவகுப்பை பார்வையிடயிருந்தனர். அந்த நேரத்தில் கடற்படை அணிவகுப்பிற்கு மேலே தோன்றி சில வட்டங்களிட்டு விட்டு மறைந்து விடுவது என முடிவு செய்தனர். அவர்கள் ஆசை,

ஜனாதிபதி விமானத்தைக் கண்டுவிட்டு, "இதென்ன விந்தை" என பக்கத்திலே யிருக்கும் ராணுவ அதிகாரிகளை வினவுவார்; அதிகாரிகள் பறக்கும் விமானம்தான் கிடையாதே. இந்த சிக்கலான கேள்விக்கு எப்படிப் பதில் கூறுவதென 'திரு திரு'வென விழிப்பர் என்பது. இந்த விளையாட்டின் மூலம் யுத்த இலாகாவின் அசிரத்தையும் தங்கள் ஆகாய விமானத்தையும் அறிமுகப் படுத்த விரும்பினர். அதற்கான ஆயத்தங்கள் தயாராயின. அகில உலகிலும் பரபரப்பை ஏற்படுத்த இருந்த சம்பவம் விமானத்திலேயுள்ள தடுப்புகள் முறிந்த காரணத்தால் கடைசி நேரத்தில் கைவிடப்பட வேண்டியதாயிற்று.

பிரான்ஸ், இங்கிலாந்து போன்ற நாடுகளில் ரைட் சகோதரர்களின் ஆராய்ச்சி பற்றிய ஆர்வம் வளர்வதைக் கண்டு இறுதியாக அமெரிக்கா ஆகாயவிமானத்தைப் பற்றி அக்கறை கொண்டது. போர்ட் மையர் என்ற இடத்தில் 1908-ம் ஆண்டு செப்டம்பர் 3-ம் நாள் துவங்கி 'விமானத்தில் பறக்கும் காட்சியை' ஆர்வில் நடத்திக்காட்டினர். ஜனாதிபதியின் மைந்தரும், மற்றும் பிரமுகர்களும் கண்டுகளித்தனர். கேலிசெய்த பத்திரிகை ஆசிரியர்கள் கண்களிலே நீர்ததும்ப, கன்னங்களிலே உருண்டோட, வருந்தும் உள்ளத்துடன் ஆர்விலிடம் மன்னிப்புக் கேட்டனர். பறக்கும் விமானக் காட்சி தொடர்ந்து நடைபெற்றது. புரியாத புதிர் பொது மக்களுக்குப் புரிந்தது. ஆனால் இவைகளுக்கு சிகரம் வைத்த சம்பவம் பதினேழாம் நாள் நடைபெற்றது. தான் பறந்த விமானத்தில் தாமஸ் செல்பிரிட்ஜ் என்பவனை ஆர்வில் ஏற்றிச் சென்றான். என்ஜினில் ஏற்பட்ட பழுது காரணமாய் விமானம் விபத்துக்குள்ளாகியது. செல்பிரிட்ஜ் படுகாயமுற்று சில மணி நேரத்தில் மரணமடைந்தான். ஆர்விலின் இடதுகால் எலும்பு முறிந்தது. ஆகாயவிமானத்தில் பயணம் செய்த முதல் பிரயாணி பிணமானான். இந்தத் துயரச் செய்தியின் காரணமாய் அமெரிக்க பத்திரிகைகளின் முதல் பக்கத்தில் கொட்டை

எழுத்துக்களிலே ஆகாயவிமானத்தைப் பற்றிய விவரங்கள் பிரசுரிக்கப்பட்டன. ஒரு பிணம் கீழேவிழுந்தது. பல நாள் நிறைவேருத காரியத்தை நிறைவேற்றிவைத்தது.

போர்ட் மையர் பறக்கும் காட்சிக்காக ஆர்வில் விமானம் தயாரித்துக்கொண்டிருந்த நேரத்தில் பிரான்சு நாட்டிலே பறந்து காட்டுவதற்காக வில்பர் துறைமுகத்திலே தூங்கிக்கொண்டிருந்த விமானத்தின் பாகங்களைப் பூட்டிக்கொண்டிருந்தான். பாரீஸ் மாநகரத்துக்கு 125 மைல் தூரத்திலுள்ள லெமான்ஸ் என்னுமிடத்தில் பறந்து காட்டினுன். பிரான்ஸ் குதூகலத்தில் மூழ்கியது வில்பரை பெருமைப்படுத்துவதற்காக பாரீஸ் பட்டினத்திலே விருந்து வைபவம் நடைபெற்றது. வில்பரைச் சொற்பொழிவாற்றச் சொன்ஞர்கள். அவன் எந்த சொற்பயிற்சிக் கழகத்திலே பேச்சுக்கலை கற்ருன், பிரமாதமாக முழங்குவதற்கு? இரண்டே வாக்கியங்கள்தான் பேசினுன். அவை உலகப் புகழ்பெற்றவைகளாய் ஆகிவிட்டன. "எனக்கு ஒரே பறவைதான் தெரியும். அதுதான் பேசுங்கிளி. ஆனல் மிக உயரமாக அதனுலே பறக்க முடியாது" இதற்கு மேலே எந்த வார்த்தையும் கூறவில்லை.

பிறகு பிரினிஸ் மலைச்சாரலிலே பறந்து காட்டினுன். ஸ்பெயின் நாட்டு மன்னர் ஆல்பான்சோ, ஏழாம் எட்வர்ட் போன்ற பலர் புது அதிசயத்தைக் கண்டு களித்தனர். ஐரோப்பிய மண்டலத்திலே வெற்றிக் கொடியை நாட்டி விட்டுத் தாயகம் திரும்பினுன். இப்போது பழைய வில்பர், ஆர்வில்களல்ல. "விமானம் கண்டு பிடித்த வீரர்களே வருக! தாய்நாட்டின் கண்களே வருக!" என வாஞ்சையுடன் வரவேற்கப்பட்டனர். வாஷிங்டனில் ஜனதிபதி விருந்து, நியூயார்க்கில் விமானக் கழகம் விருந்து என்ற பல்வேறு வைபவங்கள் நடைபெற்றன. எல்லாவற்றையும் ஏற்றுக்கொண்டு சொந்த ஊரான டெய்டன் திரும்பினர். இவர்கள் வரவு கேட்டு ஊரே திருவிழாக் கோலம் பூண்டது. மாதா கோவில்களில்

மணியோசை அதிர்ந்தது. மக்கள் மகிழ்ச்சி ஆரவாரம் புரிந்தனர். பல நூற்றுண்டுகளாக மனிதன் இதயத்தில் நர்த்தனம் புரிந்துகொண்டிருந்த கனவு நனவாக்கப் பட்டது. அதற்காக ரைட் சகோதரர்கள் பட்ட சிரமம் கொஞ்ச நஞ்சமல்ல. உண்மையை உலகம் ஒத்துக கொண்ட பின்னரும் உரிமையைப் பலர் திருடினர் பல் வேறு வழக்கு மன்றங்களிலே ஏறி இறங்க வேண்டி யிருந்தது, போட்டிக் கழகத்தாரின் பொருமை பல் வேறு இடையூறுகளை விளைத்தது லிலியன்தால் என்ற ஜெர்மனி விஞ்ஞானியின் பறக்கும் முறைபற்றிய ஆராய்ச்சி பேருதவி புரிந்தது. எங்கும் காரிருள் சூழ்ந் திருந்தது. நம்பிக்கை நட்சத்திரம் சுடர்விடக் காணேம். அந்த நள்ளிரவில் தங்கள் பயணத்தைத் துவக்கினர். இருபதினுயிரம் பவுன் செலவு செய்த மாக்ஸிம் என்பார் தனது முயற்சியைக் கைவிட்டார் பிரஞ்சு சர்க்காரின் மேற்பார்வையிலே கட்டப்பட்ட அட்லர் மெஷின் தோல்வியே கண்டது. இங்கிலாந்தில் பில்சர் என்ற என்ஜினியர் தான் கட்டிய விமானத்தில் பறந்து பலி யானர். எங்கும் மிரட்சி; எங்கும் பயங்கரம். அவர் களுக்கு ஏற்பட்ட சிக்கல்கள் விஞ்ஞான சிக்கல்களாக மட்டுமில்லை. கிட்டிஹாக் கடற்கரையிலே ஆராய்ச்சி நடைபெற்ற நேரத்தில் கொசுக்களால் ஏற்பட்ட உபத் திரவம், ஊருக்கு மூட்டை கட்டலாமா என்ற எண் ணத்தைத் தந்தது. கொசுக்கள் அவர்களது குருதி யைக் குடித்துக் கொழுத்தன. குவலயத்திற்கு கிடைத்த ஒப்பற்ற ஓர் சாதனம் கொசுக்களால் தடைபடுவதா யிருந்து.

1912–ஆம் ஆண்டு வில்பர் டைபாயிட் காய்ச்ச லால் இறந்தான். ஆனல் ஆர்வில் 1948 வரை உயிரோ டிருந்தான். நவீன ஆகாய விமானம் உருவாவதற்கு வழியும் வகையும் கூறினன். தன் அண்ணனும் தானும் சிருஷ்டித்த அற்புத சாதனம் போக்குவரத்து முறை

யிலும் போர் முறையிலும் ஏற்படுத்திய புரட்சிகரமான மாறுதல்களைக் கண்ணாரக் கண்டான்.

கடந்த உலக யுத்தத்தில் விமானத் தாக்குதலால் ஏற்பட்ட விளைவுகள் அவனுக்கு வேதனையைத் தந்தன. குண்டுமாரியில் நாசமான நகரங்கள், இடிந்த கட்டிடங்கள், உடைக்கப்பட்ட பாலங்கள், தரைமட்டமாக்கப்பட்ட தொழிற்சாலைகள், நெருப்பின் ஆலிங்கனத்திலே அழிந்த பூம்பொழிகள், கணவனையிழந்த காரிகையர், மதலைகளையிழந்த மாதாக்கள், தனயனை இழந்த தாய், தந்தையை இழந்த சேய், கரமிழந்தோர், காலிழந்தோர், கண்கள் குருடாக்கப்பட்டோர், காதுகள் செவிடாக்கப்பட்டோர்—அத்தனை காட்சியும் அவன் நெஞ்சை உருக்கின. எய்தவனிருக்க அம்பை நோவதெப்படி முடியும்? அப்பாவியான அவன் என்ன செய்யமுடியும், அழிவுக்காரர்கள் ஏவிய அக்கிரமத்திற்கு? ஆக்கவேலைகளுக்குப் பயன்படுத்தினால் அவனி ஆனந்தப் பூஞ்சோலையாகக் குலுங்கும் என்ற எண்ணத்திலே நாட்களை ஓட்டினான்.

ஐம்பதாண்டுகள் உருண்டோடிவிட்டன. விமானம் கண்டுபிடித்த தங்கவிழாவும் கொண்டாடியது தரணி. எனினும் புதிய சகாப்தத்தின் தலைவாயிலிலேதான் நிற்கிறோம். பூத்துவரும் புது உலகம் என்ன எழில் வண்ணம் தீட்டப்போகிறதோ! எல்லையற்ற எதிர்காலமே நீ வாழ்க!

"நான்சென்ஸ்" என்பதை அந்த வாலிபர்கள் நம்பியிருந்தால் நானிலம் இன்று ஒரு பெரும் நன்மையை இழந்திருக்கும்; தூரம் தூர்க்கப்பட்டிருக்காது. இன்று இங்கே, இரண்டு நாளிலே இலண்டன், மறுநாள் நியூயார்க் என்ற நூதன உறவு எங்கே ஏற்பட்டிருக்கப் போகிறது. பெரும் பாலைவன மணற்காடுகளைக் கடக்க ஒட்டகங்கள் தேவையில்லை. ஆரோகணித்துவரும் அராபிய நாட்டுக் குதிரைகள் தேவையில்லை. வனமிருகங்கள் நிறைந்த அடர்ந்த ஆரண்யம், வானத்தை முட்டும் மலைமுகடு, ஆழக்கடல், அதிலே இருக்கும் சுறு, சுழல்,

திட்டு, திமிங்கிலம் இவை எதைப்பற்றியும் கவலையின்றி கர்ஜனை புரிந்து விண்ணிலே விமானம் பறக்கிறது. வாழ்வு மேடையிலே எத்தனையோ மேதகு நன்மைகளை எவ்வளவோ மாவீரர்கள் செய்துவிட்டு மறைந்திருக்கின்றனர். ஆனால் எவரின் பணியும் இவர்கள் செயலைப் போல் வையத்தின் வாழ்வையே உருமாறச் செய்யவில்லை.

"நான்சென்ஸ்" என்பதற்கு மதிப்புக் கொடுத்திருந்தால் அயோத்தி ராமன் காலத்து புஷ்ப விமானம், ஆழிசூழ் இலங்கையை அனுமான் தாண்டிய அதிசயம்; கருடபுராண காலட்சேபக் கட்டுமரம், கட்டை வண்டி, காட்டுப் பாதை, பல்லக்கு, பவளத்தேர் என்பதைத் தாண்டி, உலகம் ஒரு அடிகூட நகர்ந்திருக்காது.

